உ

முருகக்கடவுடிணை.

சென்னைமாநகர்க்கந்தசுவாமிபேரிற்

# கலம்பகம்.

# திரிவந்தாதி.

அநுபவப்பதிகம், சென்னைச்சிவன் பதிகம், திருவொற்றியூர்ப்பதிகம், திருமயிலாபுரிப்பதிகம், திருமயிலைக்குகன்பதிகம், திருவள்ளுவநாயனார்பதிகம், திருவல்லிக்கேணிப் பதிகம்.

இவை.

முருகதாசசுவாமிகளென்றும்
திருப்புகழ்ச்சுவாமிகளென்றும்
விளங்குகின்ற

## தண்டபாணிசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியன.

ம-௱-௱-ஸ்ரீ கொடிப்பள்ளம்,
முனியப்பசெட்டியாரவர்கள் - குமாரர்,
ஏழுமலைசெட்டியாரவர்களால்
லா - வேங்கிடராமாநுசலுநாயுடு அவர்களது
ஸ்ரீநிதி அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டன.

ரிஜிஸ்த்தர்—ஈஸ்வரஞு பங்குனிமீ.



உ

முருகக்கடவுடுணை.

# சாத்துகவி

புரசை - ம - ௱ - ௱ - ஸ்ரீ,

## அஷ்டாவதானம் - சபாபதிமுதலியாரவர்கள்

இயற்றியது.

ஆசிரியவிருத்தம்.

மண்டலத்தோர்களும்பரவும் வடிவேற்கைக்கடவுளருள்
வரத்தினாற்சொல்
வண்டமிழ்ச்சீர்வினவியெய துள்ளமெலாங்களிசிறப்ப
வாய்ந்தமேன்மை
கொண்டதிருப்புகழ்க்காரனென முருகதாசனெனக்
குலவுஞ்சீர்த்தித்
தண்டபாணியன்றனக்கிங் கென்னகைம்மாறியாமுணர்ந்து
தருதற்பாற்றே.

---

சிவபூஜாதுரந்தரரென்று பேர்பெற்றுவிளங்கிய
ம-௱-௱-ஸ்ரீ, ஐயம்பேட்டை,
நெல்லையப்பமுதலியாரவர்கள் குமாரர்

## சிவகுருநாதமூர்த்திகள்

இயற்றியது

தாழிசை.

திருமின்மருவுஞ்சென்னைநகர்ச்சேர்ந்தன்றனக்காங்கவிமாலை
திரடோணிரையிற்புனைதலுன்னித் தேடித்திருநெல்லையினிடத்துப்
பெருகன்பமையுங்கவுமாரர்பேணு முருகதாசனெனும்
பேரார்தண்டபாணியனைப் பிறங்குங்கருணைவழியமைத்தின்
டொருவண்பெயர்ச்சீர்த்திருப்புகழுமுரைத்தற்கரிதாம்வகுப்பினமு
முயர்வார்பிள்ளைக்கவியுநல மோங்குமிரண்டந்தாதிகளு
மருடீர்புலமைக்கலம்பகமும் வண்மைப்பதிகங்களும்பிறவும்
வனைவித்தணிந்தாங்கவற்கிருதாண் மலர்சூட்டியதால்வழுத்துதுமே.



# சாத்துகவி.

ஓம். ப. க. பூ. ஆ. வே. வை. இ. ப. கோ. ம. பு. அ. ச.

ஆதொண்டமண்டலநாட்டார் அ. வை. லக்ஷ்மிமடாலயம்;

ஸ்ரீ. கா. ம. க. நீ. ஆ. தி. க. ஞா. அ. வை. புருஷார்த்ததீக்ஷாசாலை,

இந்தியா கங்காகுல தீக்ஷாநவபீடாதீனபுருஷர்,

ஆகிய

## சுப்பராஜஅமிர்தசங்கவைசியபுருஷார்த்தகுருகவிஸ்ரீமான்

இயற்றியவை.

---

### இரட்டை ஆசிரியவிருத்தம்.

திருமகள்புணர்ந்தநெடு மால்புகழும்வேல்கொண்டு
தேவர்சேநாதிபதியாய்த்
திகழ்சமரபுரியிருந் தடியவர்க்கருள்செயச்
சென்னைமாநகரில்வந்தோனை
பெருகுகலியுருடன்வலி தீர்வதுகுறித்துப்
பிறந்தும்விளையாடல்செய்வோன்
போர்முருகதாஸன் திருப்புகழ்க்காரன்
பெருந்தண்டபாணியென்ன
மருவுமொருசித்தனைத் திருநெல்லையூர்நின்று
வருமாறுவரவழைத்து
வண்மைத்திருப்புகழ் வகுப்புக்கலம்பகம்
வயங்குபிள்ளைகவிதையோ
டிருவிதத்தந்தாதி யாதியவைகூறச்செய்
தினிதணிந்தருள்புரிந்தா
னிங்குமங்குப்புலவரானந்தமெய்தலா
லியமிகமுழக்கினரே.

### நேரிசைவெண்பா.

உமாபதிபோல் வெண்ணீ றுடன்முற் றணிந்தோன்
குமார சமையமிலை கொண்டோ - னிமாசலத்தாள்
போற்று மருமைப் புதல்வன் றிருப்புகழைச்
சாற்றுந் தமிழே தமிழ்.

---

உ

முருகக்கடவுடுணை.

# சென்னைமாநகர்க் கந்தசுவாமிபேரிற்

# கலம்பகம்.

கடவுள்வாழ்த்து.

நேரிசைவெண்பா.

பொன்னைக்கலம்பகத்தைப் போர்புரிவேற்புங்கவன்வாழ்
சென்னைக்கலம்பகத்தைச் செப்புதற்குப் - புன்னைக்
கலம்பகத்தையன்பதனைக் காணுநலமாப்பு
கலம்பகத்தை யன்பதங்கள் காப்பு.

கட்டளைக்கலித்துறை.

இடரோவிளைத்தும்ப ரேங்குறக்காணு மிகலவுணர்
தொடரோந்தும்வேற்குகன் சென்னைக்கலம்பகங் கூறுதற்குச்
சுடரோறுளானுமை மால்கணநாதன் மெய்ச்சொற்குருவென்
மடரோசிவானன மோராறுமுன்னின் றருடருமே.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஆறுவகையிலக்கணநூ லரங்கேற்றுமுருமலையி லம்பொற்பா
வைக், கூறுபட்டநாசியிந்நாள் கலைமகண்மூக்கந்நாளங்குண்டானுற்
போற், றேறும்வண்ணஞ்சென்னைநகர்க் குமரன்முன்னோர்கலம்பக
நூல்செப்புகின்றே, னறுமலர்த்துளவணியு மவள்கணவன்விதிப்
பன்போனடக்குமன்றே. ... ... ... ... *

நூல் - மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா—தரவுகள்.

பூமகளவீற்றிருக்குமெழிற் பொலிமருமத்திருமாலு
நாமகளுக்குயிர்போலு நான்முகத்துப்புத்தேளும்
விண்ணாட்டுக்காவலனும் வேறுளபல்வானவரு
[illegible]யேட்டைப்பேய் வருத்தாமாகவரு

நேரிசைவெண்பா.

எனைப்படைத்துகானிலத்தி லேற்கவிட்டவேதன்
றனைப்புடைத்துன் றண்டையந்தா டாராய் - சினைப்பெடைப்புட்
கண்டேங்கும்வாவிக்கவினார்ந்த சென்னையிலோர்
தண்டேன்றுங் கைக்குருநாதா. (உ)

கட்டளைக்கலித்துறை.

நாதாந்தத்துற்றநின் மெய்வடிவோர்ந்துய்கை நானறியேன்
வேதாந்தமோனமுற் றேரூமையொத்தேனின் விரைமலர்த்தாட்
போதாந்தவீட்டிற் புகுவதுண்டோமதுப் பூங்கமலச்
சீதாந்தரங்கத்தர்வாழ் சென்னைமேவுஞ்சிவகுருவே. (௩)

கொச்சகக்கலிப்பா.

சிவகுருவைச்சென்னைநகர்ச் செவ்வேளைப்போற்றிசைக்குந்
தவமுயலமாட்டாமற் சஞ்சலத்திற்றாழுநெஞ்சே
யவமொழிப்பதெவ்வாறுள் ளானந்தமெய்தலெவ்வா
றிவணவளியாதென்றுழலு மீனமறலெவ்வாறே. (௪)

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

எவ்வானவர்க்கு மிடையூறொழிக்கு மெழில்வேலணிந்தமுருகோன்
செவ்வானமன்ன குகனீடில்வண்மை திகழ்கின்றசென்னைநகர்வே
ளொவ்வாதடென்ன வொருகிள்ளைகாதி லுரை செய்தவுண்மையுணரா
ரிவ்வாதனைக்கு மவ்வாதனைக்குமிடைநையு மின்னலினரே. (௫)

புயவகுப்பு.

தன்னதானனதான - தனனதானனதான
தன்னதானனதான - தன்னத்தனந்தன.

இன்னதேவுலகாளும் வன்மைதோய்தரலாகு
மென்னுமாறிருபேர்க ளெண்ணத்துமொன்றலே
இம்மைவாதனையேனை யம்மையோடறமோதி
யெம்மையாள்கையிலாசை மன்னித்துலங்கலே
யெண்ணிலாமுதுசூரர் தம்மைவேல்கொடுகீறி
யின்னல்வானவர்தீர்கை நண்ணிச்சிறந்தவே
யின்மையாதழியாத வுண்மையாதெனநாடி
யென்னைவாழ்பவரூடு மின்னிப்பொலிந்தவே

பன்னவாகனமீது வெண்மைமாதுடனேறு
மண்ணல்கோவெனமோதும் வண்மைக்கிசைந்தவே
யம்மகோததியூடோர் விம்முபாயலின்மாய
னங்கனேதியமேன்மை துன்னிக்கிடந்தவே
யன்னையாமெழுமாதர் கொம்மைவாண்முலைவாய்க
ளண்ணுநாளையின்மாறி யுண்ணப்பிசைந்தவே
யஞ்ஞர்நாடரிதாய தன்மைபேசிடும்வேளை
யைம்முகேசுரனீடு சென்னிக்கணின்றவே
வன்னமாயிரமாக முன்னுதோகையதாகு
மஞ்ஞையாடடல்வேழ முன்னந்துரந்தவே
வண்ணமேசவியாது பன்னுமோர்கிளியோடு
வன்மைமீறியசேவ நன்னேச்சுமந்தவே
வன்னிகூதளநீப மன்னுதார்பலவோடும்
வன்மநாவலர்பாடல் பின்னப்புனைந்தவே
மன்னர்சேகரர்நாடு பொன்னுலோகவலாரி
மம்மர்மால்கரியீயு மின்னைப்புணர்ந்தவே
சின்னமூதியவேடர் கன்னிமாவிடைமூழ்கு
செம்மையோதினரோகை செம்மப்புரந்தவே
தின்னவூன்விழையினர் புன்மைதோய்பலகோடி
சென்மமூடறுமாறு தண்மறற்றுதைந்தவே
தெண்ணிலாமரபாளர் தன்மமோருருவாய
தென்னனாகியபோதும் விண்ணுற்றுயர்ந்தவே
செந்நெல்வார்வயலூடு கன்னல்போலொளிர்சீர்கொள்
சென்னையூர்முருகேசர் திண்மைப்புயங்களே. (சு)

நேரிசைவெண்பா - தவம்.

புயங்கப்பணிப்பெருமான் புண்ணியங்களெல்லாம்
வயங்கத்திரண்டோர் வடிவாய்ச் - செயங்கமழுஞ்
சென்னைநகரித்திருக்கோயின் மேயசெவ்வே
டன்னைநம்பும் வாழ்வேதவம். (எ)

கட்டளைக்கலித்துறை.

தவந்தரவாவெனறுனைக்கூவிப் போற்றுந்தமியனன்பை
யுவந்தரவாமையனீத்தாளத்தக்க வுபாயமின்றோ
பவந்தரவாம்பொருள் வாஞ்சையிநாள் கெடப்பார்த்தருண்மிக்
கவந்தரவாணர்புகழ் சென்னைமாநகர்க் காங்கெயனே. (அ)

கலிப்பா.

காங்கேயன்சென்னைநகர்க் காவலவன்கானவள்ளி
பாங்கேயிரந்துபட்ட பாடறிந்தும்பத்தர்களை
யீங்கேனிரக்கவிட்டா னீகைநலமில்லானோ
கோங்கேயரும்பனைய கொங்கைமலர்க்கோமளமே. (௯)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கோமளக்குயிலேயன்ன கோதையர்பகர்குற்றேவல்
சாமளவலைத்திடாதுஞ் சரணமென்றலையிற்சூட்டாய்
தேமளக்கனைநேர்செல்வந் திகழ்தருசென்னைமேவித்
தாமளக்கரியமுன்னைத் தவமுளார்தமிழ்கொள்சேயே. (௰)

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

சேயவானன மாறுடைக்குமரனைச் சென்னையம்பதிக்கோயின்
மேயவேலனை யநுதினந்தமதக வெளியினிற்காணாரோ
தீயமாந்தரைத் திருநெடுமாலெனச் சித்தசனெனத்தென்ற
லாயவெற்பினனெனத்தமிழ்கொடுதுதித் தருநரகடைவாரோ. (௰௧)

எண்சீர் விருத்தம்.

அடையலர்தம்படைக்கொருவெங் கூற்றேயாகி
யடியவர்தங்குழுவினுக்கின் னமுதேயாகித்
தடையறுநல்லீகையிலோர் தருவேயாகித்
தமிழ்மழைபெய்வானொருவன் றனைக்காட்டாமல்
விடையுகைத்தோனுடனுரைத்த பொருள்சொன்னாலும்
வேண்டேன்காணென்னைவம்பில் வெருட்டவேண்டாங்
குடைநடிக்குந்தாளானே சென்னையூர்ப்பொற்
கோயிலிடங்குடியிருக்குங் குகப்பெம்மானே. (௰௨)

நேரிசைவெண்பா - தாய்சொற்றது.

மானீன்றபெண்ணை வலிதின்மணம்புரிந்த
யானீன்றமங்கைக் கிசையாயோ - தேனீன்ற
பூவும்வெறுத்தாள் புகழ்தோயுஞ்சென்னைநகர்
மேவுமுருகாவா விரைந்து. (௰௩)

கட்டளைக்கலித்துறை.

விரைந்தருட்பேறெய்த வேண்டுமென்றெண்ணி மிகவுமுள்ளங்
கரைந்தடியேன்படும் பாடறியாய்கொல் கனிதமிழில்
வரைந்தபல்பாடலுந் தீயனவோநின் மனங்கொடிதோ
புரைந்தகொன்றின்றிய சென்னையினீடும் புகழ்க்கந்தனே. (௰௪)

மடக்குத்தாழிசை.

கந்தநாண்மலர்ச்செங்கடம்பயிலானே கருதுவார்க்கடம்பயிலானே
கானகத்தொருத்திமருவுகாமுகனே கவுரிபான்மருவுகாமுகனே
யந்தமிலமரர்பரவுநாட்டியனே யருமறைபரவுநாட்டியனே
யரன்விழிப்பாலத்துதிக்குநன்னலனே யறிவிலார்துதிக்குநன்னலனே
வந்தனைக்கிரங்கியருட்டருவானே மலைக்குறவருட்டருவானே
மாமரமுறியப்பொருமகாரதனே வாளுடுப்பொருமகாரதனே
செந்தமிழ்க்குறுமாமுனிமறவானே திருக்கறமுனிமறவானே
செங்களந்துவைந்தவேற்கைவாசியனே சென்னையூர்வேற்கைவாசி
[யனே.

இரட்டையாசிரியவிருத்தம்.

வால்வளைக்கைமகளிர் மயலாயநோயிடைவருந்தாது பொரு
ளாவலான, மனமொல்கியூர்கடோறு மலையாதுபுவியாசைவந்துபோ
ராடிடாது, நால்வகைப்புலவர்களு மிகலாதுதவவேட நல்லோரிகழ்
ந்திடாது, ஞானமொடுசித்தியும் பெற்றுனக்கடிமைசெயு நாளொன்
றுதித்திடாதோ, மேல்வருங்காரியமு முன்னுணடந்தனவும் வெகு
வாகநீயுரைத்த, விதமெண்ணிவாடுவது மறியாய்கொல் வேறின்மை
வெட்கமின்றிச்செய்ததோ, சேல்வனப்பிலகும்விழி வள்ளியும்புலவ
ர்தரு செல்வியுஞ்சொல்லவிலையோ, தென்னையுங்கமுகுமலர் புன்னை
யும்புடைநிலவு சென்னையம்பதிமுருகனே. (௰௫)

நேரிசை யாசிரியப்பா.

முருகவிழ்ந்தொழுகு முண்டகப்பொகுட்டின்
மருவுநான்முகன்பான் மறைப்பொருட்பிழைகண்
டிடித்துவன்றளைசேர்த் தெண்கட்புன்னீர்
வடித்தமுச்சிறையில் வைத்தமாண்பும்
பைத்தமுள்ளெயிற்றுப் பாந்தளணையிற்

பொய்த்துயில்கூர்வான் பூட்கைத்தகுவன்
மேல்விழித்திழந்த வென்றியாழி
வால்வளைத்துணையா வரச்செயும்புகழு
மொருநான்முனிவர்க் கொண்பொருளுணர்த்தும்
பெருமானவர்போற் பேணிநிற்பப்
பார்ப்பதிமுலைப்பால் பருகிளங்கனிவாய்
சீர்ப்பயனுணர்த்தத் திறந்தசெயலு
மறந்தனைபோலுநின் வடிவேலொளிகண்
டிறந்தபின்றும்போ மிடம்புக்கொளித்தார்
சிலர்க்குமுள்ளஞ்சித் தியங்குறுமகவான
றலத்துளசேனைத் தலைமைபூண்டா
யாதலிற்றினைநீ ராழியுண்டைகவிட்
டேதமின்மலயத் திருந்தமாதவற்குந்
தான்மகிழ்ந்துரைத்த சரதங்காப்பான்
வான்மலர்கொணர்ந்த வரிக்காற்கிளிக்கு
மெண்ணெண்டொழும்பர்க் கிருங்கதியளித்துத்
தண்ணென்சிவத்திற் றனைமறைத்தாற்கு
மனையர்பற்பலர்க்கு மளித்ததாகின்
புனைகழற்சிலம்பார் பொற்றுட்பொறைச்சீர்
நின்னருட்பொலிவே நிறைந்தமையுணரா
தென்னதாணவத் திடர்பலவிளைத்துப்
பேயிலேற்றலைந்து பிறர்பழியுரைக்கு
நாயினேற்கு நல்கிடத்தகுமே
வெட்டுநீஇப்புலர்ந்த வியன்மரமிரண்டு
மட்டுறுகனிகள் வழங்கப்படித்தாள்
சான்றோருடைத்தெனத் தக்கநாட்டுள்
வான்றோய்சென்னை மாநகர்க்குகனே. (யஎ)

நேரிசை வெண்பா.

குகனைத்தமிழ்ச்சென்னைக் கோமானையீசன்
மகனைக்கருதாய்மனமே - புகலிடமொன்
றில்லாப்புட் போற்பறந்தெய்த் தீனரொடுவாதாடும்
பொல்லாப்புட் போதல்விட்டுப்போம். (யஅ)

கட்டளைக்கலித்துறை.

பேரம்பாட்டனந்தம் புகழ்ப்பாட்டனந்தம் புகல்பவுமாங்
காம்பாட்டனந்தம் பதங்காட்டியாண்டிலை யாயிரம்வாய்ப்
பாம்பாட்டனந்தம் புனைசீருளார் பெறும்பண்பிதுவோ
மேம்பாட்டனந்தம் மரபோடுண்டார் சென்னைவேலவனே. (௰௯)

அம்மானை.

வேலவனுஞ்சென்னைநகர் வித்தகனையாராயிற்
பாலன்குமரன் பழங்கிழவனம்மானை
பாலன்குமரன் பழங்கிழவனுமாகிற்
சாலம்புகுக்குந் தகையானேவம்மானை
தண்மலர்க்கைமீதேந்துஞ் சந்தியன்காணம்மானை. (௨௰)

கலிநிலைத்துறை.

அம்மைக்குளஞ்சாத தீயோர்களைச்சென்றடுத்தெய்த்ததால்
வெம்மைப்படுந்துன்ப மெந்நாளொழித்தென்முன் விளையாடுவாய்
செம்மைத்தமிழ்ச் சென்னைநகரூடுகண்டன்பு செயுமன்பரை
மும்மைப்படுங்கோர வினைசுற்றிடாதாளு முருகையனே. (௨௧)

அறுசீர்விருத்தம்.

ஐயநின்றன்னைச்சேயா யருட்பராபரை கைக்கொண்டாள்
செய்யநீயவளைவேலாத் திருக்கரத்தணிந்துநின்று
யுய்யவிங்குனையல்லான் மற்றொருபொருளுளதென்றோன்
மையறீர்த்தென்னைச்சென்னை மாநகரிடத்தாள்வாயே. (௨௨)

எழுசீர்விருத்தம்.

ஆளியிற்கொடிய வீரமத்தனையுமகத்தினுள் ளடக்கிநொந்தள வில், கேளிர்முன்னெல்கிப் படுந்துயருணர்ந்துங் கிளரருட்புரிந்திலை யந்தோ, வாளியொன்றடித்தாற்களித்தவர்புதல்வாவளங்கெழுசென் னைமாநகரிற், றளிநணைதொழுவார்க் கினியபேறளிக்குஞ் சரவணக் குமரநாயகனே. (௨௩)

எண்சீர்விருத்தம் - மறவர்குடிவிற் பெண்கேட்டல்.

நரியினதுவெள்ளியபற்கடித்த பச்சூனறுங்கனிகாய் கிழங்கரு ந்தி நுமலிந்தோகை, மேயிலங்கேங்கிற்றனையாளாகிப் பயல்வியன்

குறடும் பல்கறையும்விரும்பிப்பூண்ட, வேயிணைத்தோட் சிறுமியை யெம்மனையற்கீந்தான் மிருகலநீர் பெறலாகுமெய்தான் சென்னைக், கோயின்முருகனுக்கொரு பெண்ணுமதுமுன்னோர் கொடுத்தனரோ கொண்டிலரோ குறிச்சியோரே. (உ௪)

மறவர் மறுத்துக்கூறற்றாழிசை.

ஓர்மையின்றியனையனுக்கோர் சிறுமிவேண்டுமென்னவந்
தோதுகின்றதூதபாதி யுருவமெங்கொழிந்ததோ
சீர்மலிந்தநாட்டினெற்செய் பெருமியாசைகொள்ளிலென்
றினையிடித்தசிறுமிமேன்மை தெரியவந்தனாயமென்
பார்முழுக்கமெச்சுசென்னை நகரில்வேலனன்னையோர்
பருவதத்தினெங்கள்சாதி பரமனன்றோர்பன்றியாற்
போர்மிகச்செய்வேடனீ தறிந்திலாய்கொலாதலாற்
பூவையொன்றளித்துளேம் புறத்திலுய்ந்துபோய்விடே. (உ௫)

இஃது மஃது வேறுதாழிசை.

போய்விடென்றசொற் கொண்டொதுங்கிடிற் புரவலன்றனைக் காணலாம், புந்தியின்றிமுனின்றிவண்சில புகலினின்னுயிர்போக்குவே, நீவிரும்பவனோடுபல்படை நேரினுஞ்சமாஞ்சிடே, நீடுபாற்கடலூடுதோற்றிய நேரிழைத்திரள்வானின்மேய்க், கூய்விழும்படியெங்கண்மங்கையர் கொண்டைகொண்டதுகண்டிலாய், கொற்றவச்சிரன் மற்செய்தாற்றிலன் குன்றுசேர்செயக்கொன்றிலேந், தேய்வில்வாழ்வுடைச்சென்னைமாநகர்ச் செங்கைவேலவனன்பினாற், றிறமிகப்பெறு மறவர்நாமெமர் செய்கைதெவ்வனைக்கொல்வதே. (உ௬)

நேரிசைவெண்பா.

கொல்வதொன்றுமூனருந்துங்கோ தொன்றுநீக்கியவர்
பல்வரமும்பெற்றுவக்கப்பண்ணுவா-னல்வடிவத்
தன்னையைவேலாக்கியணிந்தாடகச்சீர்நீடுமெழிற்
சென்னைநகர்க் கோயிலில்வாழ்சேய். (உ௭)

கட்டளைக்கலித்துறை.

சேயாய்ச்சரவணவாவியிற் றோன்றிச்சிகரிதொறும்
மேயாடல்செய்துபின்சென்னையில்வந்தபுகழ்க்குமரன்
மாயாவினோதனைதயென்சொல்லுவேனென்மனத்திடைநின்
றோயாதபேரின்பந்தந்து மிவ்வாறையழுட்டினனே. (உ௮)

மடக்குக்கட்டளைக்கலிப்பா.

வெட்டத்தின்ற தொருத்திகைப்பண்டமே
யுற்றளித்த தொருத்திகைப்பண்டமே
கேட்டணிந்திடல் பாவலர்மாலையே
கெடவொழிப்பது பாவலர்மாலையே
மீட்டமைத்ததெலும்பினிலம்மையே
மேனிகொண்டதெலும்பினிலம்மையே
தேட்டம்பூவஞ் செயற்களவில்லையே
சென்னைவேலன் செயற்கனவில்லையே. (உக)

அறுசீர்விருத்தம் - ஊர்.

வில்லெடுத்துப்பொருமதனன் பொல்லானென்றானுமுன்னுள் வெருண்டானென்னுஞ், சொல்லெடுத்துத்தினம்பேசும் பலநூலும வன்கணைகை சோரப்பெய்யு, மல்லெடுத்துங்களிகூர்வான் குமரகு ருபரனவன்முன் வாழூமூதூர், செல்லெடுக்கும்புன்னையங்கான் செ ழூமலர்த்தாதுருக்கு மெழிற்சென்னையூரே. (௩௰)

எண்சீர்விருத்தம் - களி.

ஊரறியக்கள்ளினிப்பென் றருந்துவதுண்டானு லொருவனைப் போற் பிதற்றுமொழியுரைப்பதில்லைக்கேண்மின், பாரளந்தமாயவ னே கஞ்சனைப்பெற்றெடுத்தான் பார்ப்பதியாள்வேதியன்பின் பதரு மற்சென்று, னூரதனைமோகினிபோய் நடுக்காட்டிற்புணர்ந்தா ணம னைக்கொன்றவனோர் காரியெதிரிறந்தா, னரணங்கண்மிகமுழங்கு ஞ்சென்னைநகர்க்குகவேளடியார்க ளாணையிவையசத்தியங்களன்றே.

இரங்கற்றுழிசை.

அன்றிலாளெதிர்நின்று கெஞ்சினரன்றிலோதைவிலக்கிலா
ராறுமாமுகமேவினார்விழி யாறுபாய்வதடக்கிலார்
குன்றிலாடினரொன்றன்மாமயல் குன்றிடும்படிநாடிலார்
கொங்கறுமலர்ச்செங்கடம்பினர் கொங்கைமீறல்குறிக்கிலார்
தென்றிசைக்கிரிநாதனன்பினர் தென்றல்வீரமொடுக்கிலார்
சித்தசன்புகழ்மோகரென்னது சித்தமூடுமுதிக்கிலார்
மன்றிணுயகர்தந்தபாலகர் மன்றலொன்றும்வழங்கிலார்
மாவட்டூர்ந்துயர்சென்னையூர்மயின் மாவலார்க்கிலையாவலே. (௩உ)

நேரிசைவெண்பா.

ஆவலெனும்பேயரியாயஞ்செய்யுமெனப்
பாவலர்சொன்னார்பலநூலிற் - சேவற்
கொடியாருஞ்சென்னைக் குமரனையேபோற்று
மடியாருக்கில்லையது. (௩௩)

கட்டளைக்கலித்துறை.

அதுவிதுமெய்ப் பொருளென்றமராடுமகிலத்தினு
னிதுவலதில்லையெனச்சொல்கின்றே னெறியாவினுக்கும்
பொதுமுதலாகியரனும்போற்றும் புகழ்க்குருவாய்ப்
பதுமமின்றேயெழிற்சென்னையில் வாழொருபாலகனே. (௩௪)

எண்சீர்விருத்தம்-சித்து.

பாலனைய பாடாணச்சுண்ணஞ்சேர்த்தோர்
பச்சிலையாற்பவளநிறம் பார்க்கச்செய்வோ
நீலநிறமாமிரும்பிற் றயிலமூட்டி
நிமிடத்தேவெள்ளைநிற நிலவக்காண்போஞ்
சாலவரும்பசிதீர்க்க வேண்டுமப்பா
தயிர்நெய்பாலுட னமுதுதந்தானன்றுஞ்
சீலமலிதருகுறத்தி கணவனாளுஞ்
சென்னைநகர் முழுதறிந்த சித்தரியாமே. (௩௫)

இதுவுமது தாழிசை.

யாமறிந்தமந்திரங்கடந்திரங்கண்மிகவுமுண்
டியாவரோடுமொழிவதல்ல யானைநாகமாகிடும்
பூமணத்தகுழன்மினார்கள்புருடராகமேவுவார்
பொன்னதாமிரும்பெனப்பல் புலவர்முன்னுரைக்கலாங்
காமனுக்கொராயிரங்கணென்றுவாதுவெல்லலாங்
கந்தனுணையிந்தவேளை கையிலுள்ளபொருளெலாந்
தாமதப்படாது கொண்டுவந்தென்முன்புகுவியடா
தமிழ்முழங்குசென்னையூர் தழைக்கவந்தசித்தனே. (௩௬)

எண்சீர்வண்ணவிருத்தம்.

தத்தனத்தனன தன்னத்தனனா.

சித்தருக்கிசையுமுண்மைப்பொருளே
சிக்கிடப்பெரிதுநண்ணிக்கொளலா
வித்தறைக்குருவையுன்னித்தொழுநா
ளெய்த்திடச்செயனின்வண்மைக்கழுகோ

முத்தமிழ்க்கினிய தென்னப்பகர்வாய்
முற்றுமிப்பொழுது விண்ணுறறனவோ
சுத்ததத்துவமென்மெய்ம்மைப்பரனே
சொற்கமோத்திலகுசென்னைக்குகனே. (௧௭)

பதின்சீர்வண்ணவிருத்தம்.

தனதனந்தத்தனத்தன்ன-தனதனந்தத்தனத்தன்ன
தனதனந்தத்தனத்தன்ன-தன்னதானு.

குகனைநம்பித்தொழற்கெண்ணி மதமனந்தத்தினிற்றுள்ளு
குரவர்புன்சொற்கள் கற்றின்னன் - மன்னுறுதே
யகநிறைந்திட்டமெய்த்தன்மை மருவியுஞ்சொறபனதநெனனு
ளவன்விளங்குற்று முற்கன்ம - வனமைதீரா
திகழும்வஞ்சத்தர்கைப்பொன்னின் விழைவும்வனகற்கிணற்றங்க
ணிடைதலுந்துற்றிடப்பண்ண-லுன்னிடாதோ
சகளவிம்பத்தினட்பின்மை நிகழும்வம்பர்ச் செருத்தம்மை
தவிர்நலங்கைக்கொளிற்பன்னு-சென்னையூரே. (௧௮)

மருட்பா.

சென்னைப்பதியிற்றிருக்கை வேலேந்திநிற்போன்
றன்னைக்கருநவொட்டாச்சஞ்சலமே - யுன்னை
யிகலெனவுணரா தேற்றநெஞ்சிற்
பகலுறழ்திருவருட்பான்மை
புகவரினெங்கு போவாய்நீயே. (௧௯)

கலிவிருத்தம்.

நீயலாதொருகடவுளருளரொனநினையே
னேயநின்னருட்பெருக்கிலோர் சிறிதளிதநெனையாண்
மாயனன்னவர்பலர்வளர் சென்னைமாநகரிற்
சேயவேல்கொடுதினந்தின நிலவுதேசிகனே. (௨௰)

மடக்குக்கொச்சகக்கலிப்பா.

சிகரிமுற்றுங்கோவிலதே தெண்டனிடுங்கோவிலதே
சுகமிருக்குங்கையானே துதிப்பவர்க்குக்கையானே
மகமருளாரூர்வானே வணங்குநர்வாழூர்வானே
திகழ்விநப்பஞ்சேயியலே சென்னைநகர்ச்சேயியலே. (௨௧)

அறுசீர்விருத்தம் - தழை.

இயல்விரும்புஞ் சென்னைநகர்க்குமரனனுப்பியதழை கையேந் துமின்னு, ளயலவருக்கஞ்சுகிலாண் மதிச்சூடாதிய துயருமாறிற்றெ ன்றுள், கயல்விழிநீருகுக்கில்லாள்கடம்பனுப்பிலென்னுமோகலந்து மாரன், செயலொழிக்கிலென்னுமோ தெரிகிலேஞ்சில நாளிற்றெரிய லாமே. (சஉ)

இதுவுமது தாழிசை.

தெரியற்கடம்புந்தமிழுமணிதிருத்தோளீராறுடையபிரான்.
சென்னைநகரிலிருந்தெனது செல்விக்கனுப்புஞ்செழுந்தழையி
லெரியிற்சுடுமாமதிகுளிர்கைக்கெழிற்கட்கருணைத்துளிசிறிது
மிரவின்பொழுதைச்சுருக்குவதற்கேற்றமருந்துமிளங்கிள்ளைப்
பரிகட்டியதென்றலந்தேரோன் பார்த்துவெருளும்பரிசொன்றும்
பாலுமனமுங்கசப்பென்று பகராதருந்தச்செயும்பண்பும்
விரிபொற்புறுமுங்கீர்முதலா விளங்குமவற்றையிகழாது
விரும்புநலனும்புகுத்திருந்தவிதமென்னெனநான்விளம்புவதே. ()

எண்சீர்விருத்தம்.

விளம்புவதுதொண்டரொடுபின்வருங்காரியமே
வேண்டுவதுசெந்தமிழும் விரைமலிநீபமுமே
சளம்படுதன்மானீன்ற மகளொருத்திபாலே
தனித்திருக்கை மாதவத்தோர் தம்மனப்பூமிசையே
வளம்பெறநாடொறுங்கொடுக்கைசித்தியு முத்தியுமே
வாகனங்கண்மயிலாடு மதகரியென்பனவே
குளம்படுநீற்றணியுடையாரொந்நாளும்பெருகிக்
குலவுமெழிற்சென்னைநகர்க்குகன்செயல்கூறரிதே. (சச)

இன்னிசைவெண்பா.

அரியசமய நெறியத்தனையும்போற்றும்
பெரியகுருபரனைப பேசுங்காலியாருந்
தெரியமலைதோறுஞ் சென்றுதினமாடற்
குரியவனுஞ்சென்னைநகரோன். (சரு)

கட்டளைக்கலித்துறை.

நகரங்களாயிரங்கண்டலுத்தேனினிநானுனற்சீர்
பகரன்பரோடொரிடத்தேயிருந்துபணியச்செய்தாள்
சிகரங்குலாவு மலைத்தெய்வமேயயிற்சேவகனே
தகரஞ்சுமுன்னுலைக்கத்தாய் சென்னைமாநகர்ச்சண்முகனே. (சசு)

கலிவிருத்தம்.

சண்முகத்துச்சரவணனல்லது
விண்முகத்தொருமெய்ப்பரமுண்டெனிற்
கண்முகத்தயலாமிதுகாண்மினோ
தெண்முகப்புனற் சென்னையிற்செல்வரோ. (சஎ)

வேற்றொலி - கைக்கிளை.

செல்வியினுஞ் சீருடையாடிருக்கடைக்கண்ணோக்கமொரு சிறி தென்மீது, புல்வதன்முன்னிந்தவண்ணம் பூமாரிபொழியுமதன்புலவி ப்போதிற்,கொல்வதோரருமையோகுமரன்சென்னையிற், கல்வியேவ வடிமாக்கவின்றமாக்களே. (சஅ)

எழுசீர்விருத்தம் - இதுவுமது.

களவுமுற்றுணர்தோழவன்றியான்பகர்கனளியென்கனவூடின், றிளமுலைத்துணைதிளைப்புறப் புணர்ந்தனளியானவள்கனவூடிற், றுள துமல்லதுமறிந்துவந்துரைத்தியேலுனை யெனதுயிரென்பேன், றுள வமால்புகழ்சென்னையிற்குகனருட்டிலக்கமும்பெறுவாயே. (சகூ)

எண்சீர்விருத்தம்.

வாயனந்தந்துதிபுரிந்துங் கரம்பல்வாறுன்
வடிவேலைப்பூசைசெய்து மனமெந்நேரஞ்
சேயநிறத்துன் வடிவத்தொடு நீயேறுஞ்
சிகியரவத்தண்டைமுதற் றியானஞ்செய்து
மாயவிருட்பிணிநீங்கவில்லைநீமுன் வரினலை
திங்குயமாட்டேன் வரத்தான்வேண்டுங்
காயகநெஞ்சினர்மருவாச் சென்னைமூதூர்க்
கந்தனே வடிவேற்கைக்கடவுளானே. (ருய)

நிலைமண்டிலவாசிரியப்பா.

கடனிறத்தொருவன்காக்குங்காவ, லிடர்படக்கண்டேமீனர்த ம்பா, லவன்புணர்மனைமாரடையக்கண்டு,மிவண்டுயில்வுறனீத்தெழு கிலனந்தோ,வாதிநாயகற்கன்றுநீயருள் கூர்ந், தோதியபொருள்புக்கு ள்ளதோரெழுத்தை, யிகழ்கிலாறுவரொடியான்படுமின்னா, னிகழ்த ரலுறுதுநெஞ்சகமறியும், பைம்புற்கறிக்கும்பசுமறையயநேர், கொம் புடையினமுங்குருகினமாதிய, பிறவுமெய்துறுபெருந்துயர்களுதி, ன றவுங்கொடிதேயையகோகோ, வாதலிற்சண்மையுணிநகரிடத்தோர், மாதவன்மகவாவங்கவ்வாறு, நீவரவேண்டுமலகனிலக்கோர். காவ

லணிந்தாள்கன்னிநாடு, வாழ்வுறச்செண்டால் வடவரையிடித்த, கர்ழ்பெருந்தடக்கைக் காளையென்னத், திகழ்தரவேண்டுமல்ல தென்னர துசிற், றகமறிதரச்சொற்றது செயல்வேண்டு, மல்லதுநீயூர்ந்தகில ஞ்சூழு,வல்லதாயமயிலினையேனுங், கூவுபேரொலியாற்குலச்சுடர் மறிப்ப, மேவுதானவர்தாம் வெருண்டிரிதரச்செயத், தக்கசெஞ்சேவ றன்னையேனு, மிக்கணமலைப்பாலெறிகடற்கனுப்பி, யன்னவன்றுயில்கைக்கணையாமரவ, மின்னலெய்துறவீர்த்தெழச்சொலவேண்டுங், காவியங்களையைக்கடைசியர்களைந்து, வாவியம்புயக்கண்மகிணர்மேலெறியுந், தண்பணைச்சென்னையிற்றழைத்து, விண்பதிபுரக்கும் விகிர்தவேலவனே. (௫௧)

சவலைவெண்பா.

வேலங்கைக்கொண்டுசென்னைவீறுபெறநின்றோனே
காலங்கடந்த்கதியளிப்பான்
ஞாலங்கருதிடினுநல்குவானென்கைமறை
மூலங்கழறுமொழி. (௫௨)

கட்டளைக்கலித்துறை.

மொழியப்படாவிதமாயிரஞ்சொற்றனைமூதுலகி
விழியப்படாமணிகொங்கைநல்லார்மயலெய்தினனின்
விழியப்படாவென்றலறுமற்காக்கவிரும்பலென்றோ
கழியப்படாநலஞ்சேர்சென்னைமேவியகந்தப்பனே. (௫௩)

கலித்துறை. துறைபிரங்கல்.

கந்தமலர்க்கூந்தளமணிவானைக்கதிர்வேற்கை
யந்தணனைச்சென்னைப்பதியிற்கண்டதனாலே
யிந்தவிதத்துன்பெய்தினளென்மாதினியேனும்
வந்தணையானேலங்கசனம்பான்மடிவாளே. (௫௪)

எண்சீர்விருத்தம் ஊசல்.

வாளரிக்கண்மடமாதரின்பமோர்கான்
மறுத்தீர்ந்தமெய்ஞ்ஞான வாழ்க்கையோர்கால்
கோளகன்றசமரசநன்னிலை மேல்விட்டங்
குலமறைவாக்கியங்களெனக் கூறுநான்கு
நீளவடம்பிரணவம்பொற் பலகையாக
நிசமெனும் வேலேந்தியிருந்தாடூசல்
தேள்ளையார்க் கெமன்போல்வார்துதிக்குஞ்சீர்சால்
சென்னைநகர்க் கந்தரிருந்தாடூசல். (௫௫)

கலிவிருத்தம்.

சுல்லாபவிநோத னெனத்தமிழிற்
சொல்லார்துதியுந் துதையப்படுமோ
நல்லார்புகழ் சென்னைநகர்க்குமரன்
வில்லார்தனிவேல்புனை தோணிலாயே. (ருசு)

எண்சீர்விருத்தம்.

நிரைகொள்வாரொதிர்பொருநபார்த்தனையே நேரொர்வீரனிந் நீணிலத்தெய்தி, யரையனுதியர்பிழைமுயன்றுலு மடக்குநாள்வரினல்லதுன்னூணை, பரையுமீசனுமலர்விழிக்கணியும் பதந்தந்தாலு மென்பாழ்மனமிசையா, திரையும்வார்கடற்றெருனிமிகுஞ் சென்னையிடத்தில் வேல்பிடித்திலங்குமெம்பரனே. (ருஎ)

அறுசீர்விருத்தம்மடக்கு.

பரவைவிழிப்பரவைகொண்கற் குந்தையளிக்குந்தையையென் பங்கிற்செய்து, கரவினருக்கரவினிகழ்தருமாறுந்தருமாறுகருதவேண்டுங், குரவமலர்க்குரவவிண்ணூர்க் குஞ்சரியாட்குஞ்சரியாக் குறப்பெண்கொண்டா, யிரவலருக்கிரவலனச் சென்னையிந்நாள்சென்னையில்வைத்தியல்கேட்போனே. (ருஅ)

இரட்டையாசிரியவிருத்தம் - சம்பிரதம்.

போனகமெனக்குளத் தொடுகடலையுண்ணலாம்
பொன்வெள்ளியுலக மெங்கும்
பொலிவுறவிளக்கலாமலைபலசுமக்கின்ற
பூதத்தின் மேற்றிரியலாம்
வானகமும் வைகுந்தமுங்கையிற்காட்டலா
மந்திரத்தள வறியலா
மையலைப்பல்லுயிரும் வசமற்றுவிழுமாறு
வருவிக்கலாமிதெல்லாங்
கானகக்குறவள்ளிகணவனைச் சென்னையிற்
கவினுறுங் கந்தவேளைக்
கருதாதசிலருக்கு மெளிதாயவிதமெனக்
கவிவாணர்கண்டு கொள்வா
ரூனகடுறத்தின்கை மணிதருக்கில்லையெனு
மொருவிரதநிலைநிறுத்தி
யுள்ளநெறியாறினுக்கும் பொதுவனுமுத்தி
யுறுமாறுமுயலுவோமே. (ருகு)

நேரிசைவெண்பா.

முயலகனைச்சென்னியின்மேன் முண்டகத்தாட்கிழ்வைத்
தியலுநடமாடுமிறைவன் - மயலுடையாட்
கீந்தகுகன்சென்னைநகர்க் கென்னைமகிழ்விக்கும்வண்ணம்
போந்தமனஞ் சொல்வதுண்டோபொய். (சு௰)

கட்டளைக்கலித்துறை.

பொய்யடியார்க்கும் பணிசெய்தல்வேண்டிப்புலருமென்னை
மெ.ய்யடியார்களிற் சேர்த்தாலிழிவுன்னைமேவுங்கொல்லோ
வையடிகட்கருட்செய்தாருதவு மறுமுகவா
பையடித்தோகை மயிலாடுஞ்சென்னைப்பதிக்கந்தனே. (சுக)

கட்டளைகளிப்பா - ஊர்.

பதியின்மிக்குயர் செந்தூர்பரங்கிரி பழனிக்குன்றம் பழமுதிர் சோலைவெற், பெதிரிலேரகமால்வரையாதியா யாவர்கூறிடுமெம்மலைச்சாரலும், பொதியைநாதன் முதலோர்கள்சிந்தையும் பூதமைந்தும் புகல்வேதச்சென்னியுந், திதிதரும்புதல்வர்க் கொருகாலனுஞ் சென்னைவேலவன்சீர்திகழூர்களே. (சுஉ)

கலிவிருத்தம்.

ஊரும்வாகனமாய தோகையுடைக்குகேசனையொப்பில்செஞ்
சீருளார்மலிசென்னையிற்றிகழ் செங்கைவேலனைநம்புவார்
பாரும்வானகமுந்துதித்த பதத்தராகுவரொன்னுநா
வியாருமோர்வரிதாயினுஞ் சிறிதென்றன்மட்டிலியைந்ததே. (சுரு)

எண்சீர்விருத்தம் - மதங்கு.

இயம்புகின்றசாதிகட்கு ளுயர்ந்ததாகு
மெங்கள்குல மிந்தவிதமிகத்தோர்தேரு
ரயன்புதல்வர்தம்மிலந்த வசிட்டன்மட்டு
மறிந்துள்ளான்றமிழ்வேத மறைந்தோன்றன்னைப்
பயந்தவளார்கேட்டதுண்டோ மதங்கிநாமம்
பார்ப்பதியும் புனைந்துகொண்டாள் பழிக்கவேண்டாஞ்
செயங்கமழுஞ் சென்னைநகர்க்குக னன்பில்லார்
சிறந்தகுலத்துதித்தாலுந் தீயோர்தாமே. (சுச)

எண்சீர் வண்ணவிருத்தம்.

தானதந்ததன தன்னனதனனு.

தாமடைந்தவருள் வண்மைகொடுலகோர்
 தாழ்வொழிந்தளவினன்னலமுறுவான்
மாமடந்தைகண வன்முதலினர்தோய்
 வாழ்வையுஞ்சிறுமை யென்னுமெயுணர்வோர்
நேமம்வென்றிதிகழ் பன்னிருபுயமே
 னீபமுங்குரவு மண்ணியமுருகோ
னுமநம்பியுயர் சென்னையினிடைபோய்
 நாடொறுந்துதிசெய் துன்னிடுநிலையே. (௬௫)



பதினுன்குசீர் வண்ணவிருத்தம்.

தனனதத்ததன-தனனதத்ததன- தனனதத்ததன-தன்னனு.

நிலையினிற்பதுவு மதுபிறழ்ச்சிபடு
 நெறியினிற்செலலு மெண்ணுணு
நிதிவிளைத்திடலு மிகுதளர்ச்சிகொடு
 நிதமிரப்பதுவும் விண்ணுளார்
தலைமைபெற்றிடினு முயிர்வதைத்திடுத
 றவறெனச்சொலலுமன்னலூர்
தனியிருக்குமட மகளிரிச்சைகொடு
 தழல்வளர்த்திடலுமின்னதே
வலைகடற்புவியி லுயர்வெனக்கொளலு
 மவரவர்க்கு மவரெண்ணமூ
டவிர்வதொப்பில் பரமெனலுமற்றுமிவை
 யனையபற்பலவு முன்னினுன்
மலைவிலுத்தமர்கள் குடியிருக்குமெழின்
 மருவுநற்புகழ்கொள்சென்னையாம்
வளநகர்க்கிடையொர் மயிலினிற்பவனி
 வருமொருத்தனருள் வண்மையே. (௬௬)

நேரிசைவெண்பா - இரங்கல்.

வண்மைமலிந்த சென்னைமாநகரில்வாழ் குகன்பா
லுண்மைசொல்லப்போன வொருவண்டேன் - பெண்மைக்
கிணங்கப்பகர்ந்ததுவோ வேய்ந்தசெச்சைத்தேனுண்
டுணங்கிக்கிடந்தது கொல்லோ. (௬௭)

கட்டளைக்கலித்துறை - இதுவுமது.

ஓகோவென்கிள்ளை வரக்காண்கிலேன் சென்னைபூர்க்குகன்பாற்
பாகோடுறழ்தமிழ்க்கிள்ளை யொன்றுண்டதுபற்றியதோ
கோகோவென்றன்பொடு பேசாதென்னேனுங் குளறியதோ
நாகோரமுள்ள தன்றேசெய்யு மாறென்கொனுனினியே. (கூஅ)

நெஞ்சுவிடுதூது தாழிசை.

இனியமாதர்பலரையேவி யேவிநொந்திடைந்ததா
லியான்வளர்த்தகிளியொடன்ன மெனுமவற்றைவிட்டபின்
றனியளாகிவிண்ணிலேகு நாரையோடுமுகிலொடுஞ்
சாற்றினேனெனக்கிசைந்த சரதமொன்றும் வினவிலேன்
பனிமலர்க்கடம்பணிந்து சென்னையூரில்வாழும்வேள்
பட்சம்வைத்திடானெனப் பகர்நதிடற்குமஞ்சினேன்
கனிவுமன்பொடுள்ளநெஞ்ச முன்னையன்றிமற்றையோர்
காதல்கூறவல்லரல்லர் கடிதிலேகிவருதியே. (கூகூ)

குறம்- கட்டுத்தாழிசை.

வருகுறியுஞ்செல்குறியு முளகுறியுஞ்சொல்வேன்
வாதுகொண்டுபகைத்தவரை வாயடியால்வெல்வே
னருகுசொன்னகெவுளியது நன்னிமித்தம்பாரா
யைந்துநெற்கை யொன்றியதென் றுரைமுற்றுந்தாராய்
திருமருவுசென்னைநகர்க் குமரனையேசேர்வாய்
தியக்கமுற்றுநீங்கியினித் தினமுமகிழ்கூர்வாய்
மருமலர்க்கைரேகையிது வம்பாமோமானே
வளம்பெருகுந்தென்பொதியை மலைக்குறத்திநானே. (எ௰)

இதுவுமது குறுந்தாழிசை.

நானுரைக்கின்றசொற்கேளாய் நற்புகழ்ச்சென்னைவிசாகன்
றானுனைச்சேர்வன்வந்தின்றே சத்தியமென்குறிகண்டா
யேனுனக்கின்னமுமைய மெண்ணெயுங்கஞ்சியும்பெய்து
வேனுறுதானையுநல்காய் மெல்லியற்செந்தகைமின்னே. (எக)

கொச்சகக்கலிப்பா - மடக்கு.

மின்னனிகர்வேலானே வினையில்விடவேலானே
பொன்னவிர்பல்பணியானே புலைத்தொழிலிற்பணியானே
கன்னல்வில்லிக்கிளையானே கரிமுகவற்கிளையானே
சென்னைநகர்க்குடையானே திறலவுணர்க்குடையானே. (எஉ)

அடிமடக்குக் கட்டளைக்கலிப்பா.

ஆனையானனத் தன்றுணைக்கந்தனே
யானையானனத் தன்றுணைக்கந்தனே
கானவேதனையஞ்செயும்வேடனே
கானவேதனையஞ்செயும்வேடனே
சேனைவீரக்கணம்பயில்வாகனே
சேனைவீரக்கணம்பயில்வாகனே
மானச்சென்னைப்பதிக்கணிநாதனே
மானச்சென்னைப்பதிக் கணிநாதனே. (எ௩)

நேரிசைவெண்பா.

நாதாந்தமோன நவிலுங்குருநாதன்
வேதாந்தஞானம் விளக்குவோன் - போதாந்தந்
தன்னையுணருந் தவத்தோர் புகழ்போலுஞ்
சென்னைநகர்க் கோயிலில்வாழ் சேய். (எ௪)

கட்டளைக்கலித்துறை.

சேயவதனங்களாறுடையான் றிருச்சென்னைபபிரான்
மாயவதனம்புவார்க்கெளியான் சொன்னவார்த்தையென்னுந்
தூயவதனநுபூதியெய்தா முனந்தூர்த்தரிடம்
போயவதனமிரந்தலைந்தேனென் புன்புந்திகொண்டே. (எ௫)

அறுசீர்விருத்தம் - பாண்.

புந்தியொருசிறிதுமின்றிப் பாணநீதூதுரைக்கப் புகுந்ததென் கொல், செந்தினகரொனவலைச்சீர்நிலவு சென்னைப்பதிக்குமரன் றிர டோள்வேட்கை, யுந்தியதுங்குன்றியதுமறியவல்லையல்லை சொன்னே னுன்சொற்கொண்டோ, முந்தியவரிரவுபகல் வந்துவந்தென்முலைப் போக முயங்கினரோ. (எ௬)

தாழிசை இஃதுமஃது.

நார்மலிந்தநானிருக்க வவர்பயந்தமதலையா
நாதனென்கரத்திருக்க நாணமொன்றுமின்றியே
யேர்மலிந்தவேடமிட்டு விழிமருட்டும்விலைமினா
ரீனவூனருந்தும்வா யிதழ்ச்சுவைக்கநண்ணினர்
பேர்மலிந்தபாணநின்னொ டென்றனைவலுற்றதாப்
பேசலுண்மையாகிலென் பெருந்தவஞ்செய்பெற்றியே
நீர்மலிந்தவயல்குலாவு சென்னையூரின்முருகவே
ணையமென்னுளத்திலாத நிமிடமொன்றுமில்லையே. (எ௭)

பஃறொடைவெண்பா.

இல்லைப்பொருளைநம்பி யேமாந்திருப்பவர்பாற்
பல்லைத்திறக்கும்வண்ணம்பண்ணதே - தொல்லைமறை
யார்க்கின்றசென்னைமுரு கையாவருட்கடைக்கண்
பார்க்கின்றதாகப்பகர்ந்தாயே - நீர்க்குமிழி
யன்னவுடல்வாழ்க்கை யநித்தியமென்றன்பரொல்லாஞ்
சொன்னமொழியெண்ணித்துடிக்கின்றேன் - முன்னநின்கைக்
கிள்ளைநானுற்கிலேசம் பெருக்குமையல்
கொள்ளைகொள்ளையாகவந்து கூடுவதேன் - வள்ளைநெடுங்
காதார்குறத்தியொரு கைப்பிரம்புங்கொண்டுபல
போதார்வஞ்சொற்றிடலும் பொய்யாமோ - நீதா
னெனையசைக்கின்றாயெனுஞ்சொல் லேதமற்றதாகி
லுனைவழுத்தலென்றனுரமோ - பனையுறழுங்
கைக்கயத்திலேனும் கருங்கோட்டயத்தேனு
மிக்கமயில்வாகனத்தின்மீதேனுந் - தக்கபுகழ்
வல்லமுனிவரும்பல் வானவர்களாதியரா
மெல்லவருஞ்சூழ வெதிர்தோன்றி - நல்லகனு
வொன்றிற்கொடுத்தவர முள்ளபடியேநடக்கும்
வெனறிப்பெருக்கமிகக் காட்டித் - தென்றிக்கோன்
வேதனனங்கனென்பார் விருப்பனுகாத
போதமயமாகப்புரி. (எஅ)

கலிநிலை வண்ணத்துறை.

புரிதுன்றுமிருகொம்பு திகழ்கின்றதகர்கொண்ட புகழெண்ணு வே, னெரியின்கண்மெழுகென்று தளர்துன்பமறவந்தெ னெதிர்மன னுவாய், வரிவண்டுமதமுண்ட பலதந்திதெருவெங்கும்வருசென்னை யூர், கிரியொஞ்சுபுகழொன்ற நடனஞ்செய்துயர்வென்றி கிளர்மன்ன னே. (எகூ)

குறளடிவஞ்சிப்பா.

மன்னவர்முதற் பொன்னுடையவர், தம்மெதிர்தினமெம்மதும னா, மொல்குறுந்துயர் நல்குபுன்மய, லாவதுமுனதேவலதெனி, ன ல்லதுமறைச்சொல்லருணிறை, வென்கைமெய்ப்படாநின்கழற்கொ டாய், பேசவாயில் லாசமில்புகழ்-மரீஇய, சென்னையம்பதியிற்சிறந் த, தன்னேர்தடினார்க்குத்தருமுருகோனே. (அ0)

நேரிசைவெண்பா.

முருகார்கடம்பணிவான் மும்மூர்த்திகட்கு
மருகாயவராயவனும்- பெருகாண்மைச்
சேர்ந்தனெழிற் சென்னைநகர்ச் செவ்வேளவன்றிருத்தாண்
மாந்தருக்கு மெய்துவது. (அக)

கட்டளைக்கலித்துறை.

வதுவைப்பருவம்வந்தெய்தியும் வாடும்வனிதையெனப்
பொதுவைக்கருதியும் பேறடையாதுபுழுங்குகின்றேன்
விதுவைப்புனையுஞ் சடையார்மைந்தாவெற்றிவேல்பிடித்து
மதுவைப்பொழியுங்கடம்பணிந்தாய் சென்னைவாழ்கந்தனே. (அஉ)

அறுசீர்விருத்தம்.

வாழுமறைமுடிவுணர்ந்தாரனையசிலர்நிர்க்குணநின்வடிவமென்பா, ராழுமறிவினர்க்குமெட்டா யெனச்சொல்வார் நான்றுணிவுற்றஞ்சிடாம, லேழுபிறப்பினுந்தடுத்தாள் பவனென்பேன்றளர்நடைச்சே யென்றுஞ்சொல்வேன், காழுறுமாமரம்பிளந்தவடிவேலாசென்னைநகர்க்கந்தவேளே. (அ௩)

எழுசீர்விருத்தம்.

வேள்படைப்பொலிவுங்குளங்களும் வயலும்வீதியுமாதியை விரித்து, நாள்படக்கவிசொற்றலை வுருதுனையேநவிலுமெய்த் தொழும்பரிற்கூட்டாய், காள்படுகுதிரைத் தலைப்பெரும்பேயாற் கலங்கிநின்றிறைஞ்சினுன்றனையு, மாள்பரம்பொருளேயசலமுற்றுடையா, யவிர்புகழ்ச் சென்னைவேலவனே. (அச)

எண்சீர்விருத்தம்.

அவலமதிதீர்ந்தபல பெரியோர்தாமு மகம்புறமொன்றெனத்துணிவுற்றறைதலாலென், றவமுதிர்ந்திட்டாலுமில்லாவிடினுந்தோகைத், தனிப்பரிமேற்றிருச்சேவைதரத்தான்வேண்டுங், கவளமதகரிமுகவற்கிளையபாலாகார்த்திகைப் பெண்ணூர்வளர்த்தகந்தாவெங்கள், சிவகுருதேசிகமுருகாபொன்னூர்போலுஞ், சென்னைநகர்க்கோயிலில்வாழ் செயச்செவ்வேளே. (அரு)

எண்சீர்வண்ணவிருத்தம்.

தய்யதன-தன்னதன-தந்ததன-தானு.

செவ்வரிகடின்னும்விழி மங்கையர்களாலே
தெள்ளியவர்தம்மையிகழ் கின்றசிலதீயோர்
பௌவநிகர்புன்மையி லமிழ்ந்துமடிவேனோ
பையரவைபுண்ணுமயி லின்கணனிவாரார்

யவ்வவர்தமெண்ணமென நின்றகுமரேசா
வையமறுசண்முகம மைந்தகுருநாதா
தெவ்வருயிர்விண்ணிலுற வென்றவடிவேலா
செல்வமிகுசென்னையினடஞ்செய்முருகோனே. (அசு)

கழிக்கரைப்புலம்பல்-தாழிசை.

முருகுவிரியுமலர்த்துணரு முத்தும்வளையுமெடுத்தெறிந்து
முழங்கிச்சிறிதுந்துயிலாது முழுதும்பசுமைப்பொலிவெய்தி
யருகுவருவார்களைவெருட்டி யலையச்சலியாதெந்நேர
மங்கட்புனன்மிக்கிறைத்துமதி யதன்முற்கொதிக்குமணிக்கடலே
குருகுமுழங்கும்பொழிற்சென்னைக் குகனையெனதுமகள்போனீ
கோலாகலச்சீர்ப்பவனியினிற் கும்பிட்டனையோவலதெனைப்போற்
பெருகுமுனையீன்றுள்ளாளும் பேறில்லவளாமலடிருந்து
பிரியவிரதம்பலநோற்றுப் பெற்றுள்கொல்லோபேசுதியே. (அஎ)

இதுவுமது-எண்சீர்மடக்குவிருத்தம்.

பேசுகின்றமாதருக்கு மறவாதவலரோ
பிணங்குமதன்மாதருக்கு மறவாதவலரோ
மாசுபடல் புன்னையிடைக் கலைகையணிவண்டே
வளியசைக்கும் புன்னையிடைக்கலைகையணிவண்டே
கூசுமனநாவாய்மேல் வருந்திருக்கையினமே
குத்தவெனநாவாய்மேல் வருந்திருக்கையினமே
தேசுகொடைக்கந்தர்முற்றுஞ் சேரவிரங்காரோ
சென்னைநகர்க்கந்தர்முற்றுஞ் சேரவிரங்காரோ. (அஅ)

அறுசீர்வண்ணவிருத்தம்.

தானதனனத்-தன்னதானனா.

காரணமெனச் சொன்னவாய்மையோர்
காலமழிவுற்றின்னலீயுமே
ஞாரணன்முதற்றுன்னு தேவர்தா
நாளுமுனை மெச்சுண்மைநீநமோ
பூரணபதத்தண்ணல்பாலகா
பூதரமுகட்டண்ணு மாடலா
யாரணன்மூப்பண்ணு தேசிகா
வார்சறுதமிழ்ச்சென்னைவேலனே. (அகூ)

நேரிசைவெண்பா-கார்காலம்.

வேலாயுதம்பிடித்து மிக்கபுகழ்ச்சென்னையில்வாழ்
கோலாகலச்சீர்க்குமரன்மேன் - மாலானாள்
வாடும்விதமறிந்தும் வாடைக்கனல்பரப்பி
மூடுகின்றதந்தோ கொண்மூ. (கூ௰)

இஃதுமஃது கட்டளைக்கலித்துறை.

மூவர்க்குமுன்னவனீன்றசெவ்வேளை முதிர்ந்ததமிழ்ப்
பாவற்றிடாப்புகழ்ச்சென்னைக்குகேசனைப் பார்த்தமின்னா
ளியாவர்க்குநன்மைதருங்கார்கண்டேங்கின ளீனமதன
பூவச்சமிவ்வண்ணமாறுமென்றுங் கொல்பொழிந்திடினே (கூக)

பனிக்காலம் அறுசீர்விருத்தம்.

பொழிந்திடுங்கார்க்குலங்களஞ்சிப் புறம்போகப்பனிவிளையும் பொல்லாக்காலம், வழிந்தமதுப்பூங்கமல மடியுமென்றாலெவர்க்காகு மலர்கைத்தீயும், கழிந்தமதகரித்தோலுமொருபாதிப் பெண்ணுருவுங் கனவெண்ணீறுங், குழிந்தகடல்விடத்துணைவுஞ் சென்னைநகர்க்குகன்றாதைகொளனன்றாமே. (கூஉ)

இதுவுமது எண்சீர்விருத்தம்.

நன்றறிவாரினமலியுஞ் சென்னைமூதூர்
நடுநிலவுகுகன்றிருத்தோணகிலபாரத்
தொன்றமகிழ்வுறுவார்க்கே நல்லதாகி
யொளிருமிந்தப்பனிக்காலந் துரகம்பூண்டோன்
வன்றழலார்முதுகாட்டிற் சென்றான்மாயன்
வடவைததியுறுமிடத்தில் வசித்தான்வேதன்
கொன்றருந்தும்வேள்வியுமாமெனத் தன்னூலிற்
குளிர்காயுநிமித்தம்வம்பு கூறினானே. (கூரு)

வேறு - எண்சீர்விருத்தம் - வேனிற்காலம்.

கூறுநலமத்தனையுங் குலவுதமிழ்ச்சென்னைக்
குமரகுருபரமுருகன் கொற்றநெடுந்தோளீ
ராறுமணிந்திடுஞ்சுகநா ளடையாதகால
மான்றலையிற்கங்கையினை யணிந்துகொண்டகால
மீறுதவிர்பாற்கடலி லரிதுயின்றகால
மெழில்வேதன்றாமரைப்பூ விடையிருந்தகால
மாறுபடாத்தேவர்குல மமுதமுண்டகாலம்
வசந்தன்றேர்மிசை மதனன்வரும்வேனிற்காலம். (கூச)

அறுசீர்வண்ணவிருத்தம்.

தானத்தனதன்னத் - தனனு.

காலத்தொடுகன்மப்பிணிதீர் காதற்கொடு நின்னைத்தொழுநான்
ஞாலத்தினெண்ணப்பெறுசீர் நாடிப்பெரிதின்னற்படலா
லாலத்தினையுண்ணத்துணிவா ராசற்றுயமுன்னுற்றருள்வாய்
சீலத்துயர்சென்னைக்குகனே சேவற்கொடியுன்னப்புரியே. (கூரு)

தாழிசை.

உன்னப்புரியாவிடிலென்றனையிவ் வுலகுன்னடியானெனவோ திடுமோ, வென்னப்பனு மன்னையுமன்னவர்போ விருதெய்வமுநீயல திங்குளவோ, முன்னப்படியென்றெடுசொல்லியவா முடியாமலிருக் கை முறைக்கழகோ, சென்னைப்பதியிற்புலவோர்பரவுஞ் சிவசண்மு க தேசிகசிற்பரனே. (கூசா)

எண்சீர்விருத்தம்.

சிற்பரத்திலுற்பவித்த செல்வனுகுமுன்னையே
தெண்டனிட்டிறைஞ்சியுந் திருட்டுநெஞ்சமமைவுறு
தற்பவாசனைக்கணெய்தி யென்னையும்படுத்துபா
டறிகிலாய்கொலின்னநின் னருட்பெருக்கமைத்திலாய்
முற்பவத்திலப்படிக் கிருந்ததுண்மையாகுமேன்
மோகமாதியிந்தவாறு மூடிநிற்கலாகுமோ
விற்பனக்குழாமியைந்த சென்னையூரிடத்திலோர்
வேலணிந்துமயிலின்மேல் விளங்குகின்றமெய்யனே. (கூஎ)

பள்ளுத்தாழிசை.

மெய்யேசொல்பவர்க்கிரங்குவா ரருள்வெள்ளக்கடலினமுதனூர்
வேரிக்கடப்பந்தாரிற்பொலிந்து மிளிருஞ்செந்தமிழ்வேட்கையார்
கையேந்தியகுக்குடத்தினூர்வளங் கமழுஞ்சென்னையிற்காவலார்
கழனித்தொழிலினடுகைக்கிறங்கிக் காலங்கடத்துங்கடைசியீர்
மையேய்ந்தவிர்கண்வெருட்டுஞ்செங்கனிவாய்வக்கணையுநிறுத்திடீர்
வளர்ந்தநாற்றிதன்றிளநதையாதலின் மடங்கிக்கயங்கமிதிக்கொணு
தையேருழவர்தம்மைமயக்கியவர்கைப் பரம்புந்தடுக்கிறீ
ரகன்றுபோகாமனெருங்கிடாதெடுத்தணிகுழம்பாமற்பதிமினே. ()

தனதானதத்ததந்த தனதன்னதானனு.

பதியாமுனக்கியைந்த நடைமன்னுவார்களே
பரலோகநட்பொன்றமுதலுண்மை தேறுநா
னதிமோகமுற்றவம்ப ரெனவெண்ணில்வீடுதோ
றலையாதெழிற்சிகண்டி மிசைகண்முனேர் வையோ

பொதியாசலத்தொர்தொண்ட னறிதன்மையாளனே
புகழ்தோய்தமிழ்ப்பொழிந்த கிளிநண்ணுதோளனே
நதிமாதினைப்புனைந்த சடையண்ணல்பாலகா
நவைதீர்மலர்க்கடம்பு மலிசென்னைவேலனே. (௯௯)

நேரிசையாசிரியப்பா.

வேலைக்கலைபுனை மெல்லியலொடுநீ
மாலைப்பிரிந்து மனிதரிற்கடையா
மீனர்தம்பா லியைதருகொடிதால்
வானவரவுணர் வன்மைக்குடைந்தார்
மாதவர்முதலோர் மனமிகவிடைந்தார்
வேதமாதியநூல் விதிமிகப்பிறழ்ந்தன
மின்னைநேரும் விதிர்வேற்படைக்கைச்
சென்னைக்குமரன் றிருப்பதந்நாணை
தொன்னீர்மையளாத் துலங்குதியிதுநின்
னன்னீர்க்கொவ்வா நடையெனலறிவாய்
தணவருங்கருணைத் தண்மதியொடுவெண்
புணரியிற்றோன்றும் பொருவில்பூமகளே. (௱)

முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

---

எண்சீர்வண்ணவிருத்தம்.

தனதனதனதன தன்னத்தனந்தனனு.

அருள்வலியினரொடு துன்னச்செயும்புலவோ
ரவைநடுவதிதரும் வண்மைப்பதந்தரும்வேண்
மருமலரவனெமனென்னச்சொலுங் கொடியோர்
வசமுறுபழவினை தன்னைத்தணந்திடுநீர்
பெருகியகடலைமுனுண்ணத்துணிந்தவன்வாய்
பெறவருதமிழுணியின் முற்படும்புகழ்தோய்
தெருண்மருவியதயில்கொண் மற்புயங்கொடுவாழ்
சிவகுருபரன்மகிழ் சென்னைக்கலம்பகமே.

குருபாதமேகதி.

---

தெய்வமேதுணை.



உ

முருகக்கடவுடுணை

# சென்னைமாநகர்க் கந்தசுவாமி

# திரிவந்தாதி.

## விநாயகர்துதி.

பொன்னையந்தாதிவை யொக்குமென்றெண் ணும்புனிதர்நெஞ்சந்
தன்னையந்தாதியை பூவாக்கொண்முன்னவன்றாள்பணிவா
நன்னையந்தாதியர் சொல்வள்ளிகுஞ்சரிநாதன்வைகுஞ்
சென்னையந்தாதிக் கவிநூறுநன்குசிறந்திடவே.

## நூல்.

திருவருளேயுலகெல்லாமென்றோர்ந்தும் பொய்ச்செல்வமருட்
கெருவருளேதமிக்கெய்திநொந்தேன் பெருங்கீர்த்திநல்கா
யிருவருளேகப்பிரான்மதலாய் விண்ணிலிந்திரர்க்கைந்
தருவருளேற்றத்தனே சென்னைமாநகர்ச்சண்முகனே. (க)

முகமன்பகரவல்லேனல்லனியானுன்னைமுன்னுமென்னெஞ்
சகமன்பகரமுதலென்றநூலுண்மை யாரச்செய்வாய்
பகமன்பகரமொல்கும் புகழ்ச்சேந்தபழுதில்சென்னைக்
குகமன்பகரந்தை யெய்தாதருளுங்குருபரனே. (உ)

குருவானவர்முற்று நீயேயென்றோர்ந்துங்குவலயத்திற்
றருவானவனிவனென் றெண்ணுமோகந்தவிர்ந்துய்ந்திலேன்
பெருவானவர்சிறைமீட்டாய் தினந்தினம்பேணுமன்பர்
கருவானவந்தருள்வாய் சென்னைமாநகர்க்காவலனே. (ங)

காவலராண்மையினைப் பொருளாகக்கருதிநொந்து
தேவலராண்மையலுள்ளாழ்ந்து நாளுங்கெடுதலஞ்சாப்
பாவலராண்மையினூர்வானைச் சென்னைப்பதிக்குகனைத்
தூவலராண்மையயர்ந்தவிர்ப்பானைத் துதிக்கலரே. (ச)

துதிக்கைக்கரியவதனத்தின்றன் றுணைச்சோதரனை
மதிக்கைக்கரியவருளாளனைச் சென்னைவாழ்குகனை
திதிக்கைக்கரியவன்றங்கைகைப்பாலனைச் சிந்தைசெய்வோர்
புதிக்கைக்கரியவன்முன்னோற்குங் காலற்கும்பொல்லவரோ. (௫)

பொல்லாதவனையமிட்டறியாவஞ்சன் பூரியர்பாற்
செல்லாதவனையகோவென்னையாளிற் சிறப்புனக்கே
நல்லாதவனையொப்பாய் சென்னையூர்க்கந்தநாதவெண்ணில்
கல்லாதவனையொடுபுனத்தேகுங் கழற்குகனே. (௬)

கழகத்தியனையங்காட்டச்சென்று யருட்காதலுற்றுத்
தொழகத்தியனைப்புரந்தாய் நின்மெய்மைத்தொழும்பினில்லா
வழகத்தியனைவுதீர்த்தென்னையாள் சென்னைவாழ்குகவா
னழகத்தியனைய ரில்வள்ளிமோகத்தமிழ்ந்தவனே. (எ)

அமிழ்தந்தரத்தினர்க் கீந்தான்மருகனையாடகச்செஞ்
சிமிழ்தந்தரமன்ன கொங்கையிடைவிழிச்சீரினர்பாங்
கிமிழ்தந்தரகம்புகுதானைச் சென்னையிடத்திற்கண்டாற்
றமிழ்தந்தரந்தையெல்லாங் கெடுப்பானிதுசத்தியமே. (அ)

சத்தியஞ்சத்தியஞ் சென்னைக்குகன்றிருத்தண்டையந்தா
ணத்தியஞ்சத்தியமாதியபாடு நன்னூரியர்மால்
கைத்தியஞ்சத்தியங்கைக்கேவனையுங் களிப்பினர்க்குப்
புத்தியஞ்சத்தியங்கின்னலெய்தாது புகழெய்துமே. (௯)

புகலிப்பனவனனையான்வந்தானுகர் பூரியரோ
டிகலிப்பனவமியற்றலென்றே வெள்ளிலேனுமம்மாட்
சிகலிப்பனவொடுதோன்றியாண்டரு டைமையிற்றீ
யகலிப்பனவம்புசெய்தனன்றே சென்னையாதிபனே. (௰)

ஆதிக்குமாரகுருநாதனீ யென்றறிந்தநெஞ்சைப்
பேதிக்குமரநிகர்மாலுறுதெனைப் பேணுதியெண்
மாதிக்குமர கதத்தோகைநீட்டு மயிற்குகவைம்
போதிக்குமரக்கையான்போற்றச் சென்னைபுரப்பவனே. (௰௧)

புரந்தரனுகம்புரக்கச்செய்தா யயன்பொய்தவிர்த்தாய்
நிரந்தரனுகத்துயிலானுறுந் துயர்நீக்கினைநிற்
றரந்தரனுகமங்கேட்கச்சொன்னா யெனைத்தள்ளிவிடே
லரந்தரனுகத்தமிழ்ச்சென்னைகாக்குந் தொழிற்கந்தனே. (௰௨)

கந்தக்கமலமலர்வாவிச் சென்னையிற்காலனை
வெந்தக்கமலமலராமென்றோர்ந்து விடுமவருள்
ளந்தக்கமலமலர்த்தாள்வைப்பானை யறிபவரார்
முந்தக்கமலமலர்ச்செகுத்தா னன்னர்முன்னுநரோ. (௰௩)

முன்னந்தரங்கக்கடற்சூர்ச்செற்றானை முழுதுநம்பு
மென்னந்தரங்கத்தினின்றானைச் சென்னைக்கிறையவனைப்
பொன்னந்தரங்கத்துமாயோன் மருகனைப்போற்றுகிலா
ரின்னந்தரங்கமுறும் பலயோனியிலெய்துநரோ. (௰௪)

எய்தவிற்காமனயன்கூற்றண்டாவித மெண்ணிவிண்ணி
னைதவிற்காமன்பின்மூழ்கின்றிலே னென்னையாள்வினையே
செய்தவிற்காமனத்தார்க்கரியாய் சென்னைச்சீர்ப்பெருக்கம்
பெய்தவிற்காமர்க்கண்மூவாறு தோய்நலம்பெற்றவனே. (௰௫)

பெற்றமுள்ளாரையவென்றேத்துஞ் சேயைப்பிணங்குமருட்
செற்றமுள்ளாரையந்திர்ப்பானைச் சென்னையிற்றெண்டனிட்டு
நற்றமுள்ளாரையர்வாழ்வுங்கசக்கு மெஞ்ஞானமுற்றுங்
குற்றமுள்ளாரையரிகையும் வேண்டுங்கொடுமையென்னே. (௰௬)

என்னகத்தங்கமலப்பொகுட்டேறு மிளங்குமரன்
பன்னகத்தங்கப் பிரான்றரும்வேள்சென்னைபட்டினத்து
மன்னகத்தங்கத்திருக்கோயிற் சேந்தன்மயிலில்வந்தால்
வின்னகத்தங்கடலாங் கடனீரவண்மேவிடுமே. (௰௭)

மேவியவித்தையொரொட்டுமிந்நாளில் விரைந்தளித்திப்
பாவியவித்தைவிட்டேடேறச்செய்துகண்பார்முதுசூ
ராவியவித்தையர் தம்மூர்புரந்தவயிற்குமரா
காவியவித்தையன்னாட்கெளியாய் சென்னைக்காங்கெயனே. (௰௮)

காங்காயவாரியொப்பாமறை நூறமிழ்கற்றவர்முற்
றீங்காயவாரினர் கோயிற்றடத்திலலங்குமுப்பாற்
பாங்காயவாரிணைக் கொங்கையின்பாற்குயர்பாலதென்றோர்ந்
தேங்காயவாரிளைப் பென்றொழிப்பாய்சென்னையிற்குகனே. (௰௯)

இற்கவலைக்குட்சுழன்றாலுநானிலத் தெண்ணில்பன்னூல்
கற்கவலைக்குமையத்துழன்றாலுங் ககனமின்னாள்
சொற்கவலைக்குருகுங்குமரோசனைத் தொண்டரின்னு
லற்கவலைக்குதவுஞ் சென்னையூரிற்கண்டாருய்வரோ. (௨௰)

உய்யப்பணியுந் தவயோகமார்க்கங்களொன்றுமிலேன்
பையப்பணியும் வெட்கல்குன்மின்னார்தரும்பாசமுற்றேன்
மெய்யப்பணியுந்து செஞ்சடையானன்னர்மிக்கதொண்டு
செய்யப்பணியும்பரோங்கவைத்தாள் சென்னைச்சீர்க்குகனே. (௨௧)

சீர்த்தகங்கைக்குளுதித்தானையூனுகர் தீமகஞ்செ
றார்த்தகங்கைக்குண்கலமாக்கொள்வான்விழிச் சோதியனைப்
போர்த்தகங்கைக்குக்குடமோட்டும் வேற்புயப்புங்கவனைப்
பார்த்தகங்கைக்குமென்சிந்தையுஞ் சென்னைப்பதியொத்ததே. (௨௨)

பதிக்குங்குமரத்துருவாகினானைப்பரமனுமுன்
றுதிக்குங்குமரனைச் சென்னைக்குகேசனைத்தொண்டரது
மதிக்குங்குமரத்தவன்னத்தினா னென்னவாழ்த்துகில்லார்
விதிக்குங்குமரணநல்கெமனூர்க்கும் வெருளுநரே. (௨௩)

வெருளங்கராமும்பர்வாழப் பொருஞ்சென்னைவேலவனை
யிருளங்கராப்படச் செற்றான்மருகனையேத்தலன்றி
மருளங்கராசலத்தூர்வார்தமையு மதிக்கலமென்
றெருளங்கராவணிப்பெம்மானில் வாழ்குநர்சேர்நலமே. (௨௪)

சேராதவன்றுயரெய்தச் செய்தாய்பலதீயர்முகம்
பாராதவன்றுகடூர்கவியானெனைப் பன்னல்கண்டா
யோராதவன்றுஞ்சுபேரொளிச்சேந்த விணையில்சென்னை
யூராதவன்றுமலைமேற்புரந்த பண்புற்றதெங்கே. (௨௫)

எங்குள்ளவருமெனையிகழ்ந்தாருனக் கென்றவற்றோர்
பங்குள்ளவருமுளாருன்னையேதினம்பற்றலினீ
தங்குள்ளவருமைநீயறியாய்கொ றமிழ்ச்சென்னையூர்ச்
செங்குள்ளவருகனுதியர்த்தாக்குஞ் சினத்தண்ணலே (௨௬)

சினக்குங்குலக்குறப் பேதையைக்கானிற்றிருத்தியநீ
யெனக்குங்குலப் பிலருட்சீர்சற்றீதற்கியைந்திலையே
கனக்குங்குலவுகுழன்மானிகேட்பக் கவிபகர்ந்தாய்
வனக்குங்குலமணக்குங்கோயிற் சென்னைவளர்கந்தனே. (௨௭)

வளந்தருகைக்குறிஞ்சிக்கிழவோன் சென்னைமாநகர்வா
ழிளந்தருகைக்குன்ற மாமுகத்தோன்றுணையெங்குருவென்
றுளந்தருகைக்கும் படிவானவேழமுறினுமொப்பா
ரளந்தருகைக்குருவிர்தம் பெய்தானுமளியிலரே. (௨௮)

அளியிலங்காமையிற்றேன்றுங்குழலியராசைவிஞ்சி
யொளியிலங்காமைப் பதத்தேவிழுவதொழிக்குமரு
களியிலங்காமையில்வாகனனே மலக்காட்டு[illegible]லார்
தெளியிலங்காமையன்கண்கூசுஞ்சென்னையிற்றேசிகனே. (௨௯)

தேசிக்கனியன்னகொங்கைமின்னார் மயற்சேறெனும்பொய்ப்
பாசிக்கனியன்னறவோருக்கன்ப னென்பண்பருளா
யாசிக்கனியன்னம்வாழ்வயற் சென்னைக்கதிபமுன்னூன்
மாசிக்கனியன்னவைதீரக்குட்டிய வானவனே. (௩௰)

வானவலாரியையாண்டானைச் சென்னையில்வாழ்குகனைக்
கானவலாரிளம்பேதையைக் கைக்கொளுங்கள்வனையென்
னீனவலாரிதயத்தேபல்வாறு கண்டேத்தப்பெற்று
நானவலாரிகடந்தின்பவாரியினண்ணிலனே. (௩௧)

நண்ணியமோகக்கடன்முற்றும் வற்றிநின்னுண்மலர்த்தா
ளெண்ணியமோகவிளையாடலியான் செய்யவென்றருள்வாய்
புண்ணியமோகனப் பாணர்க்கெளியபுகழ்ச்சென்னையாய்
கண்ணியமோகதிர்வேலோடெய்நாதுகவற்றுவதே. (௩௨)

கவரிக்கணம்பயில்வாவியஞ் சென்னையிற்கந்தனைமுன்
னுவரிக்கணம்பயில் வேலானைநாடியொருங்குநம்புந்
தவரிக்கணம்பயின் மொய்க்கினஞ்சாரரிதண்ணளியார்
செவரிக்கணம்பயிலானூர்பெறும் பொருட்டேடுநரே. (௩௩)

தேடுமருணைவுதீர்தரப்பெற்றுச் செழுந்தமிழாற்
பாடுமருணைக்கிளிபோலும் பேறுறப்பாவிப்பையோ
வேடுமருணையளிமலர் வாவியெழிற்சென்னையாய்
வீடுமருணையஞ்சேர்கண்களாய் வெற்றிவேற்றெய்வமே. (௩௪)

வேற்றுமையின்றிச் சமயங்களாறினுமேவிநுகற்
[illegible]மையின்றிருச்சேயாங்குகேசன் கிருபைபெறக்
காற்றுமையின்றிடைவார்க்கரியான் சென்னைக்காவலணியாம்
பேற்றுமையின்றியைந்தால் வண்டர்கூட்டம்பொடிபடுமே. (௩௫)

பொடிக்கவியையப்படப்பாடுஞ் சிற்சில்புலவர்முன்னு
கடிக்கவியைந்தனைநான்கேட்கை நல்கிலைநாட்கழித்தாய்
செடிக்கவியைந்தருமேற்பாயுஞ் சோலையஞ்சென்னைக்கந்தா
விடிக்கவியையரவன்னூர்க் செருக்குமிகலருளே. (௩௬)

இகலந்தனிற்கவுதைத்தார் நுதற்கண்ணிடத்துதித்தா
யகலந்தனிற்கதிர்வேலணிந்தாய் சென்னையாண்டிருந்தாய்
பகலந்தனிற்கச்செய்தாற் கொன்றுளான்முதற்பத்தர்புகழ்
புகலந்தனிற்கலந்தின்புறுமாறு புலர்வதுண்டே. (௩௭)

புலவிக்குறத்தியைவேண்டுகின்றாய் தினம்போற்றிக்கெஞ்சுங்
கலவிக்குறத்திவருந்தச்செய்தாயெனுங் காரணமென்
னலவிக்குறத்திகழ் செவ்வாம்பல்வாய்விண்டுநன்குரையாய்
குலவிக்குறத்தில்புகழ்தோயுஞ் சென்னையிற்கொற்றவனே. (௩௮)

கொற்றவனென்றுறழ் பேரொளிதோய்ந்துங்குளிர்குகவே
ணற்றவனென்றுருக் கொள்ளவல்லான்சென்னைநகர்ச்சேய்
கற்றவனென்று பிறவார்தஞ்சங்கணிகாதிலுண்மை
சொற்றவனென்றுணையல்லான் மற்றொன்றுந்துணையல்லவே. (௩௯)

துணைக்கயற்கண்ணிக்கரனீந்தநாளினுஞ் சொற்கிறகு
மிணைக்கயற்கண்ணியங் குன்றவென்றான்செந்நெலேய்ந்தபுனற்
பணைக்கயற்கண்ணிமிர்தென்னையஞ் சென்னைப்பதியினென்னை
யணைக்கயற்கண்ணிய சொற்பனத்தேயென்னிலார்க்கஞ்சியே. (௪௰)

ஆராதனஞ்சயிலம்பகத்தோகை யணிமயின்மாச்
சேராதனஞ்சயிலம்பகத்தோகையன் சீர்மைத்துனன்
காராதனஞ்சயிலம் பகத்தோகையகாவல்சென்னை
யோராதனஞ்சயிலம்பகத்தோகை யண்ணெண்சுடர்க்கே. (௪௧)

சுடலையிலாடிய பெம்மான்மகனைச்சுரர்களுய்ய
வடலையிலாடியன்றுள்ளானைச் சென்னைக்கதிபதியைக்
கடலையிலாடியக்காக்குருநாதனைக் காணப்பெற்று
னடலையிலாடியதுபோன்று நெஞ்சினவையறுமே. (௪௨)

நவையகத்துக்கஞ்சகிக்கின்றிலே னுன்னைநம்புமன்ப
ரவையகத்துற்றுக்களிகூரச் செய்தருளாழிசுற்று
மிவையகத்துள்ளவரொள்ளிடு மாறுமிசைத்தனையே
செவ்வையகத்துங்கடற்சென்னையின் வேற்கைச்சிறுதெய்வமே. (௪௩)

சிறுக்காதவன்மைமிக்கெய்தியதான் மனஞ்சிரழிந்து
மறுக்காதவப்புணர்ப்புற்றதந்தோ பொன்மயிலில்வந்தா
ளிறுக்காதவர்க்கொடுசெய்தன்ன வேலொன்றெடுத்தகையாய்
செறுக்காதவஞ்சரில்லாச் சென்னையூராருட்சேவகனே. (௪௪)

சேவடிக்காசைசிறிதுமில்லாச் சிலர்செப்புபுன்மசாற
பாவடிக்காசையுமேற்றருள் கூறுமெய்ப்பண்புடையா
கோவடிக்காசைமலர்மேனிக் கானக்குறத்திகொண்கன்
பூவடிக்காசையஞ்சேர் சென்னையாளும்புரவலனே. (௪௫)

புரவலராதியபொய்ச்செல்வர்தம்மைப் பொருட்படுத்து
மிரவலராதியலாதருளாட லெனக்கருள்வாய்
குரவலராதிருசசென்னைக்குகாதண் குறிச்சிதருங்
கரவலராதிகழ்கைவேற்கந்தா வுமைகாதலனே. (௪௬)

காதலடையலர்கோவாயிருப்பக் கனிவில்குற
மாதலடையணிவேட்டுநின்றுயருள் வாழ்க்கைத்தொண்ட
ரோதலடையநின்றேள்களென் சொற்கட்குவப்பிலவோ
சாதலடையலர்க்கீவார்தஞ் சென்னைத்தமிழ்க்கந்தனே. (௪௭)

தமிழாவலைவெறுத்திட்டாய் கொலென்னத்தவிக்குமென்னை
யுமிழாவலைகடற்பாரினரொள்ளுவ தோர்ந்திலையோ
சிமிழாவலைவற்றெழுமுலையார் மயற்சேற்றினிடை
யமிழாவலைதவிர்த்தாள் சென்னைமேவுமயிற்கந்தனே. (௪௮)

அயிற்கந்தனாரணன்போற் பணிமீதுநின்றுடுமெழின்
மயிற்கந்தனாரணன்வாய்விடக்குட்டும் வலியுடையான
மெய்யிற்கந்தனாரணன்மிக்கொல்குஞான விநோதன்சென்னை
வயிற்கந்தனாரணன்மாந்தர்க்கெப்பேறும் வழங்கலுண்டே. (௪௯)

வழுங்கஞ்சனன்கென்மனஞ்சாட்சியாப்பெற்று மங்கையர்கைக்
கழுங்கஞ்சனண்ணடையாதியி னுட்டங்கழிந்துய்ந்திலேன
முழுங்கஞ்சனக்கரிமும்மதநாற்றமுதிர் சென்னையாய்
பழுங்கஞ்சனங்கழச்செய்யுமெந்தாயருள் பாலித்திடே. (௫௰)

பாலாற்றணியவிர்தொன்னாட்டுச் சென்னைப்பதியினிற்செங்
கோலாற்றணியனவுணரைச் சந்ததங்குத்திக்குத்தி
வேலாற்றணியப்பொருவோனவன் புகழ்விண்ணவருங்
காலாற்றணியதுயிலான் சொல்லாற்கொஞ்சங்கந்தனோ. (௫௧)

கறறவித்தாரக் கவிவாணர்போற்றிக்கருத்ததனுற்
ற்றவித்தாரணிக்குன்றெங்குஞ் சென்னைப்பதியினும்வாழ்
புற்றவித்தாரணைச்சென்னியென்பார் தம்முனேற்கும்விளை
முற்றவித்தாரடியேனெந்தையென்னமொழிகுவனே. (௫௨)

மொழிக்கரும்புச்சுவைகாட்டு மின்னார்தருமோகத்தினு
லொழிக்கரும்புன்மையுற்றேனையென்றாள்வைகொலூழ்வினையார்
கழிக்கரும்புட்கருள் கல்லெறியாமெனல்கற்பனையோ
விழிக்கரும்பும்புனலார்க்கெளியாய் சென்னைவேலவனே. (௫௩)

வேலங்கையானையன்சிட்டித்தவாம்பல வெற்புமுள்ளான்
ஞாலங்கையானையர்போற்றெழிற்சென்னை நகருடையான்
சீலங்கையானையோடாடேர்கை யென்னத்தெரிந்தபின்னர்
மாலங்கையானைவென்றுனெனவாழிச்சைவந்ததுவே. (௫௪)

வந்தனக்காரனைப்பைங்கிளியாக்கிய வானவன்வேற்
கந்தனக்காரனையங்காட்டுஞ் சொல்லினன்கண்ணுதல்வீழ்
செந்தனக்காரனைபாலுண்டவாயன் றிருச்சென்னையா
னந்தனக்காரனையார்சொல்லுவாய் கலையாரணங்கே. (௫௫)

ஆரணங்கட்குமறியாததாகு மறுமுகத்தோர்
பூரணங்கட்குளிர் கொன்றையினூர்விழிப்புத்திரனைப்
பாரணங்கட்குன்றுதோறுடிச்சென்னைப்பதியில்வர
லேரணங்கட்குறைதீர்வதற்காம் விதியெய்தலினே. (௫௬)

எய்தலையாறுவயதிற்குண் மூன்றிலொன்றென்னுமுன்னூன்
மெய்தலையாறுகவியிடைபொன் கடைவேறொன்றில்லைப்
பெய்தலையாறுங்கடல்போல வைப்பதைப்பேசிற்சென்னை
யைதலையாறுடையார்தவம் பார்ப்பதியம்மைகன்றே. (௫௭)

அம்மைக்குவித்துவிருப்பென்னு நூன்முறையாய்குநரோ
டெம்மைக்குவித்துச் சும்மாவைகவைத்திலையேழ்கடல்சூழ்
கொம்மைக்குவித்துயரந்தீர்வதெண்ணிக் குலையவிட்டா
யிம்மைக்குவித்துருமம்போல் கந்தாசென்னையேத்துனக்கே. (௫௮)

உனக்கந்தரந்தம்புலையாளர்தம் மிடத்துண்டுகொலென்
மனக்கந்தரங்கொண்மான் மருகாசென்னைவாழ்முருகா
கனக்கந்தரங்கம்புக்காதுடையா னெறிகைதொழுமான்
றனக்கந்தரங்கம் பொலிவாழ்வுறச்செயுந்தன்மையென்னே. (௫௯)

தன்மையிலாடவர் நாணுமவீரர்தருக்குமிகப்
பொன்மையிலாடவென்முன் வந்தொருசொற்புகன்றருளாய்
முன்மையிலாடகாடெய்ய வேலுமுருகமுகட்
டின்மையிலாடனத்தாவாமன் சென்னைக்கிறையவனே. (௬௰)

இறையவன்றந்தபுதல்வனைச் சென்னைக்கினியவனை
மறையவன்றந்தழியப்புடைத்தானை வணங்குகில்லீர்
பிறையவன்றந்தமுஞ்சூலமுங்காட்டிப் பெரும்பகடு
நிறையவன்றந்தகன்வந்தாலென் செய்யநினைக்குதிரோ. (௬௧)

நினைக்கானவம்பலகாட்டினை யவ்வழிநெஞ்சைவிட்டும்
வினைக்கானவம்படுகோளோடுதோய்ந்து வெருட்டநொந்தே
னெனைக்கானவற்பொலம்பூணி லொன்றேனுமின்றீயினென்றுந்
தினைக்கானவப்பிடிமோகா தமிழ்ச்சென்னைச்சேவலனே. (௬௨)

வல்வினையானனமாறுக வப்படிவந்தகந்த
னல்வினையாள்கரநீங்காத செய்சென்னைநாயகனோர்
புல்வினையாமுனங்காத்த கருணையைப்போக்கினனோ
நில்வினையாயன்னதாமரையாய் நிசநீயுரையே. (௬௩)

நீயாகவந்துதடுத்தாண்டு மென்னதுநெஞ்சிலிருட்
பேயாகவந்துயரச்செய்கின்று யினிப்பேச்சுளதோ
மாயாகவந்துற்றிமாண்டின்னு மிங்குவரச்செய்திடே
றீயாகவந்தும்பிதோழா திருச் சென்னைச்செங்குருந்தே. (௬௪)

செங்கணம்போருகமாலனையார்மலி சென்னைச்செவ்வேள்
வெங்கணம்போருகக்கத்தானவர்க் கொல்லன்மெய்மையெனி
லெங்கணம்போருகமாகிபு மேன்பயனீந்தின்றே
யிங்கணம்போருகச்சின்னமன்னே ரிலியைந்திலரோ. (௬௫)

இலங்கத்தவஞ்செய்யலரோற் கஞ்சாமலிகத்துமுண்மை
துலங்கத்தவஞ்செய்யறிகின்றிலே னிகழ்தூலவுட
னலங்கத்தவஞ்செய்யதாமெங்ஙனுள்வைகொன்ஞாங்கர்த்திண்டோட்
கலங்கத்தவஞ்செய்யசென்னைநல்லூர் புகழ்கந்தப்பனே. (௬௬)

கந்தப்பனிக்கடம்பாரத்திற் பாடுநர்காதன்முற்று
நந்தப்பனிக்கடம்பாகாரனுஞ் சென்னைநாயகனே
சிந்தப்பனிக்கடம்பாராட்டற்றீர்த் தருட்சீர்நல்கியான்
வெந்தப்பனிக்கடம்பாழா முன்வாழ்கைவிரும்பன்மெய்யே. (௬௭)

மெய்யனந்தத்தையென்பாற்சொற்றும் பொய்யின்மிளிர்தரச்செய்
பொய்யனந்தத்தைத்தமிழ்கேட்ட தேசிகன்பொற்புயர்வேற்
கையனந்தத்தையர்காதிட்டதோர் சொற்கமுறாஞ்சென்னைத்
தையனந்தத்தைதொழற்சேரிற் செய்யுந்துணிவினனே. (௬௮)

துணியனந்தந்தரத்திற்கேற்க நல்குநர்த்தொண்டுசெய்து
பணியனந்தந்தரங்கத்தார் தம்பாற்சென்றுபற்றிறந்து
கணியனந்தந்தரறியச்சொல்வாய் மைக்கருத்துளைத்தான்
மணியனந்தந்தரவல்லார்தஞ் சென்னையில்வாழ்குகனே. (௬௯)

வாழைக்கனியஞ்சுசெம்பாகப்பாடல் வழங்குநர்முற்
றாழைக்கனியஞ்சுமந்தரசாளுந் தகைவிளக்கா
யேழைக்கனியஞ்சுசென்னியனபாற் கொளெழிற்சென்னையாய்
கோழைக்கனியஞ்சுகஞ்சேரச்செய்த குருபரனே. (௭௰)

பரந்தமனத்தைநின் பாதாம்புயத்திற்பதித்துவினை
கரந்தமனத்தையருள்கூரச் செய்தென்றுகாத்தருள்வா
பிரந்தமனத்தைகொள்வா ளின்பந்தானுமுற்றெய்திலங்கா
ணிரந்தயனத்தைநயிலா சென்னைபூரிடைநின்றவனே. (௭௧)

நின்றவனத்திரியெங்க ணுந்தொண்டர்கணெஞ்சுதொறுஞ்
சென்றவனத்திரிபுததடிந்தோன் றிருச்சென்னைப்பிரான்
மூன்றவனத்திரிவாடுறக்கோர முருடர்மக
னொன்றவனத்திரிந்தானென்ற ஞாயமுணர்ந்துய்மினே. (௭௨)

உணங்காவியன்பிற்களிகூர்ந்து மாதவத்துத்தமரோ
டிணங்காவியங்குநன்னாள்வருமோ பழியெய்துங்கொலோ
வணங்காவியன்னகுறமாதல்லான மற்றமாதர்சற்றும்
பிணங்காவியனழகா சென்னைமேவும்பிரபலனே. (௭௩)

பிரபந்தமாவனநானறியாத் தொகைபேசியுமென
னரபந்தமாவனசித்திடப்பார்த்திலை ஞானநல்காய்
கரபந்தமாவனக்கொங்கைகளாக் கொள்ளுங்கந்தவொன்னார்
மரபந்தமாவனஞ்செற்றெழிற் சென்னையில்வந்தவனே. (௭௪)

வந்திக்குமாரன்கணைபெய்யப் பெய்யவளர்ந்ததிண்டோட்
பந்திக்குமாரன்பழுதறுஞ்சென்னைப் பதியின்மின்னார்
சிந்திக்குமாரன்றிருப்புகழ்பாடுந் திறத்தினர்க்கு
முந்திக்குமாரன்புதந்தொளியா யெங்குமுன்னிற்பனே. (௭௫)

முன்னங்கமலைத்துணைமுலையோ டெழுமுத்தமிழ்ப்பாப்
பன்னங்கமலைகொண் கற்றுதித்தானைப்பரன்குருவன்
றென்னங்கமலைத்திரண்டையு மொப்புவரோதமெய்தார்
பொன்னங்கமலைவளர் சென்னைநேருநட்யோதக்கரே. (௭௬)

போர்த்தவாரணச்செல்விசெய் தீமைபொலிந்ததனு
லேதத்தவாரணமெய்திநொந்தே னெனையென்றனிப்பாய்
கீதத்தவாரணங்கூடவென்றேவிட்டுக் கெஞ்சவென்ற
நீதத்தவாரணக்கேதனர்தோய் சென்னைநேயத்தனே. (௭௭)

நேயம்பலந்துற்றிடாதென்று நாடுநெறியினர்முன்
மாயம்பலத்துழலுஞ்சிறியேனையும் வாழ்விப்பனோ
டாயம்பலத்துணைக்கண்ணார்களாடிப் பரவுசென்னைச்
சேயம்பலத்துநின்றார்தருஞ் சத்தித்திருக்கையனே. (௭௮)

கையணிக்கண்ணிய பல்படையானைக்கருணைமலி
மையணிக்கண்ணியருள்பாலனைச் சென்னைவாழ்குகனை
மொய்யணிக்கண்ணியன்றனே யெனவுமொழிகுவரோ
மெய்யணிக்கண்ணியம்பெற்றவன் சீருணர்வித்தகரே. (௭௯)

வித்தகருக்குமுதலாயநான்மறை வேண்டுநர்முன்
னத்தகருக்குயர்பேறளித்தானையணிச் சென்னையூர்க்
கத்தகருக்குழிதூர்த்தாளென் றேத்துநர்காமர்முலை
மத்தகருக்குமணிகேள்வனூனுறு மாண்பினரோ. (௮௰)

மாணாகநாடரிக்கீந்தானைச் சென்னைவருகுகனை
நீணாகநாடகத்தான மருகோனையென்னெஞ்சமிங்கு
வீணாகநாடலென்றெண்ணனமின்றே புலவோரறுத்து
நாணாகநாடரும்போற்றந் தமிழ்நிலைநட்டுநற்கே. (௮௧)

நட்டம்பயிலவல்லார்தருஞ்சேய் சென்னைநாதனிமைக்
கொட்டம்பயிலன்னகண்வள்ளி நாயகன்கொற்றவைவேல்
விட்டம்பயிலடல்வேளவற்கன்றியென் வெய்யநெஞ்சுள்
ளிட்டம்பயிலடைவுற்றவர்நாளினு மெய்திற்றின்றே. (௮௨)

இன்றைக்கயிலையொருக்கால்விட் டென்றற்கிடர்செயுங்கற்
குன்றைக்கயிலைத்திருநீறுநல்கி முன்கூறியசொல்
லொன்றைக்கயிலைக்க மாங்கனியாகச்செயொண் சென்னையாய்
கொன்றைக்கயிலைப்பிரான்மதலாய் பற்பல்கோலத்தனே. (௮௩)

கோலங்களாயிரங்கொண்டாடுஞ் சென்னைக்குமரனது
மூலங்களாயிரங்குற்றனை மாரன்வடிச்செயத்தென்
காலங்களாயிரங்கண்சோரவாட்டிட்டுக்கண்டுமிந்த
ஞாலங்களாயிரந்தான் மகன்காணென்னக்கதன்றே. (௮௪

நக்கனையட்டவந்தமூர்த்தியான்வன ஞானமலலாத்
தக்கனையட்டபிரான்றவப்பேற தனிவிழைவீர்
திக்கனையட்டவெண்பாலன்ன சொல்லிதிருமடியின்
மைக்கனையட்டசீர்ச்சென்னைபிறப்பயிலிலுண்டே (௮௫)

மலைகளையன்றுகடலோடுழித்து வருமயிலான்
கொலைகளையன்றுனென்றுலு நம்பாருட்குகன்குறத்தி
முலைகளையன்றுயர்தீர் சென்னையூர்வளமுற்றநின்ற
நிலைகளையன்றுகொல்கண்ணுடையார் சொல்வர்நித்தமுமே. (௮௬)

நித்தங்கவலைப்படவிடுத்தாய் மிகநெஞ்சயர்ந்தேன்
குத்தங்கவலைப்பொருமுலையார் விழிக்கோல்கடுளைப்
பத்தங்கவலையுஞ்சூழ்ந்ததந்தோ வருட்பார்வைநல்காய்
முத்தங்கவலைப்புனற் சென்னைமாநகர் முத்தையனே. (௮௭)

முத்தையனையநகையாரிளமுலை மோகமெனும்
பித்தையனையவிடாவெனக் குன்னருட்பேறெய்துமோ
தத்தையனையதமிழ்த்தோளனே தினைத்தண்புனவா
சத்தையனையனத்திற்சுழன்றுய் சென்னைத்தானத்தனே. (௮௮)

தானத்தனத்தனத்தெய்யென்ற கூத்தினர்தம்புதல்வன்
வானத்தனத்தனங்கானக்குயிலை மணந்தசெவ்வேள்
பானத்தனத்தனந்தம்புகழ்ச்சேய் சென்னைபட்டினத்தியா
னீனத்தனத்தனத்தம் பொருந்தாதருளீகுவனே. (௮௯)

ஈகையிலாதவர்தம்பொருட் சீர்கண்டிரக்கவெனப்
போகையிலாதவன்போன் முனில்லாதுபொறுப்பதென்னே
வாகையிலாதவத்தோர்க்கெளியாய் சென்னைவாழ்குமரா
மாகையிலாதவளையார் மைந்தாநின்மனம்வலிதே. (௯௰

மனக்காதலானவெல்லாந்தருவா யென்னும்வாயினனு
மெனக்காதலானலமெய்தமுன் னின்றிலையிவ்விளப்ப
முனக்காதலானவைக்கஞ்சிலன்காண் பெற்றுளார்புகழ்வந்
தனக்காதலானந்துலாம்புனற் சென்னைத்தமிழ்க்குகனே. (௯௧

குகையினமார்பலகுன்றெனச்சென்னையிற் கோயில்கொண்ட
வகையினமார்பத்திசெய்திரந்தார் முன்புவாஞ்சைநல்கி
யகையினமார்பறித்தார் பொருட்பேறு மளிக்கிலைவேற்
றகையினமார்பதடந்தாமரைத்தண் சரவணனே. (௯௨

சரவணவாவியில்வந்தானைச் சென்னையிற்சார்ந்ததொண்டர்க்
கிரவணவாவிதஞ்செய்யவல்லானை விட்டெட்டியென்னு
மரவணவாவியுள்ளார்கடைதோறும் வருந்தனன்றோ
சிரவணவாவியைந்தின் றமிழ்ப்பாடுந்திறத்தினரோ. (௯௩

திறந்தானமாகமுதலாவுனவெனுஞ் சிந்தையற்
றுறந்தானமாதவர்தம்மோடு கூட்டிநின்றுண்டருள்வாய்
மறந்தானமார்கரிமீதேறிச் சென்னைவலம்வருவா
யுறந்தானமாலினைச்செய்வா ர்றியுமமுமகனே. (௯௪

அறுகாலவாங்குரவாரமபுனை மசனனையானனபலார்ச்
செறுகாலவாங்குவருமாறெனக் கில்லைத்தென்பொதியைச்
சிறுகாலவாங்கும்வின்னுணிக் கென்றூர்க்குஞ்சிலர்க்கயன்பான்
மறுகாலவாங்குடலில்லையென்றே சொல்லுமாமறையே. (௯௫)

மாமரமட்டவடிவேலன் சென்னையில்வந்தவுலாக்
காமரமட்டமருண்டவென் பேதைகரியமைக்கண்
ணுமரமட்டமலவேயென்றாலு மவனஞ்சிலான்
சேமரமட்டறிந்தேசுகின்றாரினிச் செய்வதென்னே. (௯௬)

செய்யகனகவரைவில்லுளார்தவச் செல்வசென்னை
யையகனகவரை யன்புதல்வியருள்குமரா
துய்யகனகவரையந்தணந்தயன் ருட்டெனையிவ்
வையகனகவரைந்தவிதியினை மாற்றுதியே. (௯௭)

மாற்றுயராடகவம்பலத்தான் மகன்வானவர்தம்
மேற்றுயராடகந்தீர்த்தோன் றமிழ்ச்சென்னைவேள்பொடிதோய்
பாற்றுயராடகவெல்லாங் கைக்கொள்பவன் பஃறலைப்பேய்
போற்றுயராடகத்தென்னையும்வேண்டல்புதுமையன்றே. (௯௮)

புதுமைக்கதியறிந்தோச்சும்பிரான் சென்னைப்புண்ணியவேள்
கதுமைக்கதிரயிலான்றன்னை நாடுங்கருத்தினர்க்கு
விதுமைக்கதிகமெனத்தக்கதா கிந்தைமேவிடினு
மதுமைக்கதிக்கொருசாதனமா மென்னுமாரணமே. (௯௯)

ஆரணமற்றதும்புற்றாலு மீடிலறமெனச்சொல்
காரணமற்றதுபோற் பிறழ்ந்தாலுங்கருதரிய
பூரணமற்றதுதொம் மென்றரற்குப்புகன்றபடி
சீரணமற்றதுசென்னையிற்கந்தன் றிருவருளே. (௱)

முற்றிற்று.

---

வேலுமயிலுந்துணை.

சென்னையந்தாதிகண்மால் கொண்டுவாடித்தியங்கிடினுஞ்
சென்னையந்தாதினுக்கேசெயும்பாழ் மிடித்தீயுறினுஞ்
சென்னையந்தாதித்தெயென்றுடுவான் விழிச்சேய்க்கணியுஞ்
சென்னையந்தாதித்தமிழ்க்கவி நாறுந் தெளிந்துய்மினே.

---

தெய்வமேதுணை.

உ

முருகக்கடவுடுணை.

# அநுபவப்பதிகம்.

நேரிசைவெண்பா.

திண்ணியரோநம்புமயிற் செவ்வேடிருவடியென
கண்ணிலொற் றத்தந்தகவின்பாட - விண்ணிடதது
மண்ணிடததுந்தாளுவயங்கு மவனருளை
யெண்ணினர்பொற்றுடுணையாமே.

கலிப்பாக்கள்

இந்தவுலகத் தியற்கைசற்றுமாறுமற்
பந்தவினையிற்பரதவிக்கும் பண்பறிந்துஞ்
செந்தமிழ்ப்பாட்டாசையொளறுந் தீராதசிந்தையுடைக்
கந்தன்றிருவடியென் கண்ணிலொற்றத்தந்தானே. (க)

கோங்கேயனையமுலைக் கோதையர்மால்கொண்டுழலும்
பாங்கேயுருவாய்ப் பரதவிக்கும்பாடறிந்துந்
தீங்கேதுஞ்செய்யார் திருவுளததிற்சென்றொளிருங்
காங்கேயன்சேவடியென் கண்ணிலொற்றததந்தானே. (உ)

சங்கைமுழுதொழியுந் தனமையுறறுந்தாரணியிற
செங்கைவிரிததுத்திரிகின்ற தீநறிந்தும
பங்கயப்பூந்தொட்டில்வைத்துப் பல்காலுந்தாலாட்டுங்
கங்கைமகன்பொன்னடியென் கண்ணிலொற்றத்தந்தானே. (ந)

பொய்வேளுக்கஞ்சிப் புலர்ந்துபுகழ்குறையு
மெய்வேதனையால் வெதும்பும்வினையறிந்து
நெய்வேலும்வச்சிரமுநீடுமுனைச்சூலமுங்கொள்
கைவேண்மலரடியென்கண்ணிலொற்றததந்தானே. (ச)

நாமத்தொகுதி நவிலார்போனுணிலத்திற்
றூமக்குழலார் தமக்குருகுந்தன்மைகண்டு
மீமத்திலாடுமவ ரீன்றகுகனீடில்பெருங்
காமர்த்திருவடியென கண்ணிலொற்றத்தந்தானே. (ரு)

பூவலயஞ்சுற்றிப் பொருளாசைப்பேய்பிடித்துப்
பாவலங்கல்விற்றலையும் பாவமுளேனென்றறிந்துஞ்
சேவலங்கையேந்திச் சிகரிதொறுஞ்சென்றுடுங்
காவலவன்பூவடியென் கண்ணிலொற்றத்தந்தானே. (௬)

செல்வர்மனைவாயிறொறுஞ் சென்றேங்கிச்சிந்தைநொந்து
பல்வகைப்பேராண்மையையும் பாழாக்கும்பண்புணர்ந்துங்
கொல்வதஞ்சுவார்க்கெளிய கொற்றவைவேற்கோமான்பல்
கல்வரையான்றன்பதமென் கண்ணிலொற்றத்தந்தானே. (௭)

பாழிநெடுந்தோளார் பலரைப்பகையாக்கி
யாழியுடைப்பாரி லலமந்தலைதல்கண்டுங்
கோழியெழுதுங் கொடிக்கோமான்கோதறுஞ்சீர்க்
காழியர்கோன் றன்பதமென்கண்ணிலொற்றத்தந்தானே. (௮)

வேணபயன்முற்றுமெய்தும் வேட்கையுற்றுமேதினியி
ணுணமின்றிமற்றையர்போ ணுட்கழிக்குந்தன்மைகண்டு
மாணவச்சூர்மாய்த்தபிரா னந்தரத்துள்ளார்தமக்குங்
காணரியசேவடியென் கண்ணிலொற்றத்தந்தானே. (௯)

நீசநெறியொழிந்து நீணிலத்தோர்வாழ்வதெண்ணும்
பாசமுற்றும்பொன்விரும்பும் பங்கமுறுப்பண்புகண்டு
மீசன்முதன்மூவர்களு மேத்துமெழிற்குகவேள்
கர்சகன்றசிற்றடியென் கண்ணிலொற்றத்தந்தானே. (௰)

பத்தரொடுகூடிப் பலவாறுதொண்டுசெய்யு
முத்தமப்பண்பெய்தாம லூர்தோறு மேகல்கண்டு
மத்தனுக்கோர்சற்குருவா யாறுநெறிக்கும்பொதுவாங்
கத்தன்றிருவடியென்கண்ணிலொற்றத்தந்தானே. (௰௧)

நெல்லைப்பதிப்புலவ னீடுபுகழ்ச்சென்னையிற்சொல்
சொல்லைப்புனைந்தகுகன் றொல்புவியிலுள்ளபல
கல்லைவிரும்புபதங்கண்ணிலொற்றத்தந்தவுண்மை
யல்லினிகர்நெஞ்சத் தவரறியக்கூடாதே. (௰௨)

முற்றிற்று.

---

வேலுமயிலுந்துணை.

உ

சிவமயம்.

# சென்னைச்சிவன்பதிகம்.

நேரிசைவெண்பா.

சென்னைச்சிவனே திருவருட்பேற்றிச்சைகொள்ளு
மென்னைத்தொடர்ந்தாளுமீசனே- யன்னையொரு
பங்கிருக்கவாழும் பரனேநின்பதகருட
னெங்கிருக்கச்செய்யினுநன்றே

கலிவிருத்தங்கள்.

அருமறைமுடி வறியாமற்றமியேன்
றெருமருபழவினைதீரப்புரிவாய்
மருமலரிதழிகொள் —ர்பத்திறைவா
திருமகண்மருவியசென்னைச்சிவனே (க)

ஏதமிகப்பெறுமென்னைப்பெரியோர்
போதமுறும்படி புரிதற்கிசைவா
யாதவனம்புலி யழலாம்விழியாய்
சீதரனும்புகழ்சென்னைச்சிவனே. (உ)

பாவமிகப்புரி பவருக்கெமனு
மாவலளித்தனையது மெய்ப்படுமோ
மூவலில்சத்திய முடிவாமுதல்வா
தேவர்தமூர்நிகர் சென்னைச்சிவனே. (௩)

கம்பொளிர்நின்செவி களினுட்புகலாஞ்
செம்பொருளின் கவிசெயுமாறறியேன்
நம்பொருமைப்படு நரைமால்விடையாய்
செம்பொன்வளந்திகழ் சென்னைச்சிவனே. (௪)

உன்னைநினைத்தக முருகித்துதிகூ
றென்னையிகத்தினரிகழச்செயலேன்
மின்னையிடத்தினின் மிளிர்வித்தவனே
தென்னைமிகப்பொலி சென்னைச்சிவனே. (௫)

பந்துறழ்மென்முலை பழுகத்தருவார்
தந்துணைநண்ணிய தவறென்றறுமோ
செந்துவர்வெற்புறழ் திருமேனியனே
சிந்துமுழங்கிய சென்னைச்சிவனே. (௬)

விண்புகும்வாழ்வையு மெய்யென்றிசையா
நண்புடையாரொடு நானென்றுறுவே
ஞெண்புலியீருரி யுடையுள்ளவனே
தெண்புனல்வாவிகொள் சென்னைச்சிவனே. (௭)

விசையனடித் தலுமேனுளருள்வா
யிசையுமனத்தெனை யேனுள்கிலையோ
வசைதவிரெண்வகை வடிவானவனே
திசையினர்மெச்சிய சென்னைச்சிவனே. (௮)

ஆனைமுகத்தனொ டயில்வேலணிகைக்
கோனையளித்துள குணமின்றிலையோ
மானைமிகத்திகழ் மழுவோடணிவாய்
சேனைவனப்பவிர் சென்னைச்சிவனே. (௯)

நால்வர்முனுற்றுள நலமோர்சிறிதென்
பால்வருமாறருள் பாலித்திடுவாய்
கோல்வளையாண்மகிழ் குணசங்கரனே
சேல்வளநீர்மலி சென்னைச்சிவனே. (௰)

பாடியநூல்வழி பலமாதவரைத்
தேடினர்மேவிய சென்னைச்சிவனை
நீடியசீர்திகழ் நெல்லைச்சிறுவன்
சூடியபாடல்கள் சுவைதோய்வனவே. (௰௧)

முற்றிற்று.

---

**தெய்வமேதுணை.**



உ

சிவமயம்.

# திருவொற்றியூர்ப்பதிகம்.

நேரிசைவெண்பா.

ஓங்குந்திருவொற்றி யூரி லுறையுத்தமனே
னீங்குங்களபமுலைமெல்லியலாள் - பாங்கு
மகிழுஞ்சிவனே யென்வன்னெஞ்செனுங்கன்
னெகிழும்படியருட் செய்நீ.

எண்சீர்விருத்தங்கள்.

சிற்றெறும்பின்மென்குடரினுண்புழுவுந் தெய்வமேயெனத்தெளிந்துளேனெனினுஞ், செற்றபேருடற்றசைநுகர்வார்மேற் சினவுதீக்குணந்தீர்ந்திலேனந்தோ, கற்றைவார்சடைக் கண்ணுதற்பரனே கயிலைமால்வரைக்காவலுள்ளானே, யொற்றையேறுகைத் தும்பரில் வருவா யொற்றியூரிடத்துறையுமுத்தமனே. (க)

தெய்வசந்நிதிக்கொலையைபுநீக்கார் சிலருமெய்யருட்சீர்பெறச் செய்தாய், செய்வதன்றதென்றுலகெலாமுணரத் திருத்தல்வேண்டுமிச்சிந்தையேனளித்தாய், சைவநாயகனே யொருபுலவன்றமிழ் விழைந்தொருதையல்பானடந்தா, யுய்வதற்குரியார்பலர்வழுத்துமொற்றியூரிடத்துறையுமுத்தமனே. (உ)

ஆனெருச்சுடுமடலை போர்த்தெழுத்தோ வாந்துமோதிடுமவைவிட்டதனூன், றுனுணர்கினிதெனக்கொள்வார்வசமாத் தறுகுநாளிலென்றன்னையேன்படைத்தாய், தேனருமலர்க்கடுக்கையந்தொடையாய் செறிந்தவார்சடைச் செங்கனற்பொருப்பே, யூனின்வேட்கையுளாருணர்வரியா யொற்றியூரிடத்துறையுமுத்தமனே. (௩)

செந்தமிழ்ச்சுவைகுறைந்ததோவலதுன் றிருவுளத்தருட்சீர் மறைந்ததுவோ், வெந்தழூழ்வினைவலிக்கிளைத்தனையோ யாதுகாரணமெதிர்வராதிருந்தாய், நந்தவார்குழைக்காதுடையானே நங்கைசங்கிலிநன்மணமுடித்தா, யுய்ந்தநாவலூரானைத்துயர்செய்தா யொற்றியூரிடைத்துறையுமுத்தமனே. (௪)

அனகமாதவதுன்னாதுபலபூணை டடமூர்த்தியுமாய்நின்றநூள்ளீ, யென்றுபுன்கவிக்காசைகொண்டுளவா றிருவர்நெஞ்சமுமீண்டறியாதோ, பனகமார்த்தபல்லுறுப்புடையானே பாலமீதுகண்படைத்தவானவனே, யுனலரும்பெரும்புகழுடைச்சிவனே யொற்றியூரிடத்துறையுமுத்தமனே. (௫)

நீறுபோர்த்துள மாதவர்பல்லோர் நினையுமாறருணீபுரியாயே, வீறுதீர்கதிநல்கினும்வேண்டே னெனுமிவ்வாண்மையெற் கீந்தவனோ, வாறுசூடியசெஞ்சடையானே யைந்துமாமுகத்தருட்பெருங்கடலே, யூறுசெய்விடமமுதெனக்கொண்டா யொற்றியூரிடத்துறையுமுத்தமனே. (௬)

எண்கண்வேதியனைவேள் கொடுங்கூற்றமென்னுமூவர்தம்மிகலும்வென்றனையோர், திண்கராசலத்துரியோடுவிடைமேற் றிகழுமாறுளஞ்சிறிதிரங்காயோ, வுண்கண்மானிகளொருத்திபங்குடையா யுலகமியாவையு மொழிக்கவும்வல்லா, யொண்கலாமதிப் பிளவணிசடையா யொற்றியூரிடத்துறையுமுத்தமனே. (௭)

குருகுலத்தொருகாளைவில்லடியாற் குளிர்ந்தநெஞ்சகங்கொடியனேன்றிறக்கும், பெருகுமுத்தமிழ்க்கவிகளின்மகிழாப் பெற்றிதோய்தரல்பிழையலாமுறையோ, செருகுகொக்கிறகவிர்தலை வேடத்திருவுருக்கொடுஞ்செருச்செயற்கிசைந்தா, யொருகுலத்தினும்பிறந்தறியானே யொற்றியூரிடத்துறையுமுத்தமனே. (௮)

மாலுநான்முகப்பிரமனுமுன்னே வணங்குகின்றதோர்வண்மையதல்ல, வேலுளானொடுகரிமுகன்மகவா விளங்கன்மாண்பெனும்விரகளித்திலையோ, பாலுநாணுறத்தக்கவெண்ணீறுபரந்தசெந்தகைப்பவளமேனியனே, யோலும்வாலவளைக்கையினள்பாகா வொற்றியூரிடத்துறையுமுத்தமனே. (௯)

காழிமாநகர்க்கவுணியன்முதலாக் கழறுநால்வரிற்காசினிமதிப்ப, வாழிநல்லதுமகிழ்வுறுவாஞ்சைவருத்தலென்னது மனமெனத்தகுமோ, தோழிமாரொடுதவம்புரிவாள்பாற் சொல்லொணுமொழி சொல்லவுந்துணிந்தா, யூழியாயிரங்கோடிகண்டோனே யொற்றியூரிடத்துறையுமுத்தமனே. (௰)

பிழையெலாம்பொறுத்தருளவல்லானைப் பெற்றமேறியபெருந்தகைதன்னை, யுழையையொள்ளியமழுவுடனேந்தி யொற்றியூரிடத்துறையுமுத்தமனைக், கழைகுலாந்திருநெல்லையிற் சிறுவன்கனிந்துபோற்றிய கவியொருபத்தும், விழையுநெஞ்சினரியாவரோயெனினும் விண்ணுளார்களும் வியப்பவாழ்குநரோ. (௰௧)

முற்றிற்று.

---

தெய்வமேதுணை.

---

உ

சிவமயம்.

# திருமயிலாபுரிப்பதிகம்.

நேரிசைவெண்பா.

ஈற்றுமெலும்பொருநன் னேரிழையாகும்பெருமை
போற்றுமயிலாபுரியானே - கீற்றுமதிச்
சென்னியனேயுனைநா தினமுநதுதிக்குமன்பி
லென்னிதயந் தோய்தரச்செய்யே.

அறுசீர்த்தாழிசைகள்.

தானவரிற்கொடியார் புவியாள்வது தவிரசசெயுமாறு, மீனவ னிற்சிறந்துள்ள தொர்வல்லவன மிளிரும்படிசெய்வாய், கூனல்வ ளைக்குழைக் காதினனேயொருகுமரிக்கிடமீந்தாய், வானவனொன்ப ணிமாலையனே திருமயிலாபுரியானே. (க)

கஞ்சமலர்த்திருமங்கைசெய் நீவினைகாணச்சகியாதுன், செஞ் சரணத்துணை நம்பிவந்தே னுருசிறிதின்னருட்செய்வாய், குஞ்சர மொன்றுரித்துப புனைந்தாய்கையிற் கொலைவாண்மழுக்கொண்டாய், வஞ்சமனத்தினர்நாடரியாய் திருமயிலாபுரியானே. (உ)

இவ்வுலகத்தினின் மெய்யடியானெனு மேற்றந்தரலின்றே, லவ் வுலகத்தினிப் பிறவாநலமருள வாயெனள்மெய்யோ, செவ்வுருவ ப்பரஞ் சோதியனேநகைச சினமால்விடையூர்வாய், வெளவுமனத்தி னர்க்கோரொளியாய் திருமயிலாபுரியானே. (௩)

என்றன்மனதனையு நெக்குநெக்காமென விளகச்செயும்பாட, லுன்றன்மனத்தையொரோள்ளளவாயினு முருக்காவிதமியாதோ, கு ன்றவில்லேந்தியகைச் சிவனேயிருகூறுமொருகோவே, மன்றன்மதி ச்சடைவானவனே திருமயிலாபுரியானே. (௪)

இத்தனைதூரம்வருந்தியுநினைருளென்மேலொருசிறிதும், வை த்தருள் கின்றிலையித்தகைநின்னிடம்வருவித்தவராரோ, நெய்த்தமல ர்ச்செழுங் கொன்றையும் வில்வமுநிறையத்திகழ்சடைமேன், மதத ம்பெருக்கொட்டணிந்தவனே திருமயிலாபுரியானே. (௫)

ம்புலரிங்கவர் தங்கதி காடியப்படியேயடியேனு, மற்பனிணைப்பில மிழ்ந்தொழியாதுன்தருள் வேண்டுதல்பிழையோ, தற்பரசிற்பரதத் துவமாகிய தலைவாசிவசம்போ, மற்படுமூவிலைவேலுடையாய் திருமயிலாபுரியானே. (சு)

வந்தருளென்றுநின்மேற் பழிபோட்டுள வடவூரவன்முதலோர், தந்தவமெய்ப்படச்செய்திடினல்லது தமியேன்மகிழ்வேனே, செந்தமூலங்கையிற் கொண்டொருமங்கைமுன்றிணமாடியசெல்வா, மைந்தர்சிலர்க்கு முன்னின்றவனே திருமயிலாபுரியானே. (எ)

இந்திரன்றன்வன மங்கியுண்ணும்படி யீந்தோனடியேற்குய், நொந்திவண்கெஞ்சுமென்புன் மொழிகொண்டருளேக்கஞ்செயொணாதோ, பந்தியநாய்தொடர் பன்றிபின்வானவர்பலரோடுறநாணாய், மந்திரதத்துவமாகிநின்றாய் திருமயிலாபுரியானே. (அ)

ஆறுமுகத்தனொடானைமுகத்தனுமருமைமகவாகும், பேறுபெற்றாயெனையன்னவர் சொற்கொளிற் பிழையென்றிகழாதே, கூறுமறைப் பொருளாயவைபேசருங் குணமும்பலகொண்டாய், மாறுபடாவருட்டன்மையனே திருமயிலாபுரியானே. (கூ)

நின்முகமைந்தினுண்முக நால்வர்தநெறியான்மகிழ்வுறினும், பின்முகமொன்றுள தேயதையென்னது பேறுமெனநல்காய், பன்முகக்கங்கை யடைந்தசடாடவிப் பரமாவிசைபாடும், வன்முகவீணையணிந்தவனே திருமயிலாபுரியானே. (ய)

தென்புலத்தெய் தினர்தம்மையுமீட்டுருச் செய்யுந்திறனல்கும், வனபுறுமெய்யருள்வானவனைத் திருமயிலாபுரியானைப், பொன்புகழ்த்தகுகெல்லையில் வந்துளபுலவன்புகல்பாட, லன்புடைத்தென்றுதுதிப்பவரியாவரு மடையாநலமிலையே. (கக)

முற்றிற்று.

---

தெய்வமேதுணை.





உ

முருகக்கடவுடுணை.

# திருமயிலைக்குகன்பதிகம்.

நேரிசைவெண்பா.

அயிலைப்புனைந்த திண்டோளாறிரண்டுள்ளானை
மயிலைக்குகனைவணங்கோர் - குயிலனையா
ளன்பான்மகிழுமெழி லாறுமுகத்தையாவெனா
லூன்பாவமெல்லாந் தொடை.

கலிவிருத்தங்கள்

அடியாரொடுகூடி யருந்தமிழைப்
படிமீதுபரப்புநலந்தருவாய்
கொடியாடிய கொள்கையுடனகுலவுமா
வடிவேன்முருகாமயிலைக்குகனே. (க)

அயில்வேலைநினைந் தறியாதவர்போல்
வெயிலூடுறு மென்புழுவாகவிடேல்
கயிலாயபதிக் கொருகான்முளையா
மயில்வாகனனே மயிலைக்குகனே. (உ)

யானேவுனை யெண்ணிடவல்லவனீ
யேனோர்சிறிதின்ன மிரங்குகிலாய்
தேனேடியசெச்சை மலர்த்தொடையாய்
வானோர்புகழ்தென் மயிலைக்குகனே. (௩)

பெண்மைக்கிடநல்கிய பிஞ்ஞகனோ
டுண்மைப்பொரு ளோதியவாறருள்வாய்
வெண்மைக் குருகேமிளிர்கேதகைசூழ்
வண்மைப்பொலிவார் மயிலைக்குகனே. (௪)

கிள்ளைப்புலவன் கிளர்சொற்புனைநீ
யெள்ளைப் பொரவேனுமிரங்கிலையே
வெள்ளைப்புளினந் தொறும்வீதிதொறும்
வள்ளைக்கவினார் மயிலைக்குகனே. (௫)

தளைபட்டவமனனறலை மதாடமட்டூதா.
தளைபொற்புறு சிற்றடியென்றணிவாய்
களையப்படுசெங் கமலத்தினும்வால்
வளைமுத்தொளிர் சீர்மயிலைக்குகனே. (சு)

கனையின்றியகாம நெடுங்கடலின்
றினையுந்து தியக்கமறுத்தருள்வாய்
தனையுய்ந்திடுமா ஞெலிதந்திடுபுள்
வளையுங்கொடியாய் மயிலைக்குகனே. (எ)

நல்வேணுபுரத்தொருநாதனைநேர்
சொல்வேய்தருதுங்க மெனக்கருள்வாய்
கல்வேறுபடும் படிகண்டுளதோர்
வல்வேல்வயவா மயிலைக்குகனே (அ)

சேவட்டயில்வார் திரண்முற்றொழியத்
தூவட்டவிதத் தொழிலின்றருள்வாய்
காவட்டகிலங்கதறச் செயுமோர்
மாவட்டவனே மயிலைக்குகனே. (கூ)

இத்தாரணியீகைமுதற் பகர்முச்
சித்தாடுநர்சீருமளிந் தெனையாள்
சத்தாதியமுத்தகை தங்கியதோர்
வத்தாமிறைவா மயிலைக்குகனே. (ய)

குருவென்று குலாவுநரியாவருநின்
னுருவென்பதுணர்ந்து மயங்குவனே
வருவுந்தனதாய வகண்டமதா
மருவுங்குமரா மயிலைக்குகனே. (யக)

சொல்லைப்புனையுந் தொழிலெய்தினர்பால்
வல்லைக்கருள்கூர் மயிலைக்குகனை
நெல்லைப்பதியானெனநேடுமவர்க்
கில்லைத்துயரென்ப திகத்தினுமே. (யஉ)

முற்றிற்று.

---

**வேலுமயிலுந்துணை.**



உ

குருவேதுணை.

# திருவள்ளுவநாயனார்பதிகம்.

சீரார்மயிலைத் திருவள்ளுவனாரே
நாரரார்தமிழ்வேத நாயனே - யாராலுந்
தீராமகக்கொலையுந் தீதென்றுணர்த்துமும்மை
நேராகக் கண்டுகொண்டேனே.

கலிவிருத்தங்கள்.

வில்வம்புனைசடையாரருள் வெள்ளத்திடைமூழ்கி
நல்வந்தனைபுரிவானென நானென்றவிர்வேனோ
கொல்வம்பொழிவாருக் கொருகுருவாமெனநின்றீர்
செல்வம்பொலிமயிலாபுரித் திருவள்ளுவனாரே. (க)

வெஞ்சொற்புலைநூலோர்பலர் வெருளும்படிமுன்னா
ளஞ்சொற்றமிழ்வேதம் பகரறிவிற்சிறிதருள்வீர்
நஞ்சொற்பன மதனூடொருநல்வாய்மை நவின்றீர்
செஞ்சொற்பெறு மயிலாபுரித் திருவள்ளுவனாரே. (உ)

வேதத்தலைபினையல்லது வேறுள்ளனமதியார்
போதத்தினுநீரெய்திய புகழேயொளிர்வதனாற்
கோதற்றுயர்பேறொன்றிய குணமேவிடவருள்வீர்
சீதப்பொழின் மயிலாபுரித் திருவள்ளுவனாரே. (௩)

பயமொன்றுமிலாமற்சில பகர்வேனதுபனுவற்
கியமொன்றுமதுணாயேதுணை யெனநம்பியதறிவீ
ரயமொன்றியநெஞ்சத்தின ரஞ்சச்செயலருள்வீர்
செயமொன்றியமயிலாபுரித் திருவள்ளுவனாரே. (௪)

அறிவின்பயனீதென்றுல கறியும்படிசொன்னீர்
செறிகின்றவரொல்லாமது சேருந்தினமியாதோ
குறியென்றதைநம்பிச்சில கூறித்திரிகின்றேன்
செறியும்பொழின் மயிலாபுரித் திருவள்ளுவனாரே. (௫)

கொலைதீதெனவுணராதரு குருவாமுமதருளா
லலையர்நிலைபெறுசித்தியு மருள்வீடுமெய்தாதோ
மலைநேர்புயவீரத்தரு மாழ்கப்பொருபுருவச்
சிலையார்மலி மயிலாபுரித் திருவள்ளுவனாரோ. (௬)

காலாலரனந்நாள்குழை காதிற்புனைதன்னை
மேலாமமரர்க்கோதிய வியனார்புகழ்மறவே
னூலாமெனயானுஞ்சில நுவல்கின்றனவிழைவீர்
சேலார்வயன் மயிலாபுரித் திருவள்ளுவனாரோ. (௭)

விசையன்பொருமொருவன்புவி மீதித்தினமேவித்
தசையுண்கையிலாமற்புரி தருநாள்வரவருள்வீர்
குசையென்றுணர் வுள்ளார்பலர் கூறும்புகழுடையீர்
திசைநம்பியமயிலாபுரித் திருவள்ளுவனாரோ. (௮)

புவனத்திடை யுயிர்கொல்வினை போய்நல்லருள்விளையிற்
றவமுற்றியதெனநம்புறு தமியேன்மகிழ்வேனே
பவளக்கிரியெனவாழிரு பாலர்த்தருபெருமைச்
சிவனுற்றுயர்மயிலாபுரித் திருவள்ளுவனாரோ. (௯)

ஒருநால்வர்முனூறும்வாழ்வினி லொருசற்றெனையுற்றுற்
பெருநானிலமுமதாணைகொள் பிடெய்திடல்செய்வே
னிருநாலுருவத்தோர்சிவ னென்றுங்களிகூருந்
திருநாண்மலிமயிலாபுரித் திருவள்ளுவனாரோ. (௰)

செந்நூல்பகர்மயிலாபுரித் திருவள்ளுவனானை
யைந்நூறருவான்வள்ளித னருமைச்சிறுமதலை
பொய்ந்நூலினர் நாணும்படி புகலுந்துதியுணர்வார்
மெய்ந்நூல்குறளெனுமார்வ மிகப்பெற்றமைவாரே. (௰௧)

முற்றிற்று.

---

தெய்வமேதுணை.





உ

ஸ்ரீமன்னாராயணாயநம.

# திருவல்லிக்கேணிப்பதிகம்.

காப்பு - கலிவிருத்தம.

அல்லிக்கேணி யமர்ந்தபிரானையான்
சொல்லித்துன்பந் தொலைந்துவப்பெய்திட
வல்லிச்சேனையன் மாலையைமாத்திரம்
புல்லிக்கொண்டவன் பொன்னடிகாவலே.

எண்சீர் விருத்தங்கள்.

காலியினந்துயருற்றுழலாமற் கற்குடையன் றொருகையிலெடுத்தாய், வாலியதீயரவற்றைவதைக்கும் வம்பையறிந்துமுன் வந்திலையந்தோ, வேலினைவிட்டொரு கஞ்சனைவென்றாய் வேழமரற்றிவிழும்படிகொன்று, யாலிலையிற்றுயில்கூர்நெடுமாலே யல்லிக்கேணியமர்ந்தபிரானே. (க)

செம்புகர்வேழமெனத்திகழ்பொல்லார்செய்தொழில்கண்டுதியங்குறுமென்னைத், தெம்புறும்வீரரனேகர்பராவச்சீய மெனத்திரியப்புரிவாயோ, நம்புநரேவியதூதனுமானாய்நாகமதன்றலைநையநடித்தா, யம்புவியோடகல் விண்ணுமளந்தாயல்லிக்கேணியமர்ந்தபிரானே.()

பிஞ்சுமதிச்சடை யாடிடவாடும் பிஞ்ஞகனல்கு பெருத்தவரத்தான், மிஞ்சுமரக்கரனேகரைவென்றாய் மேதினியித்துயர்மேவிடலாமோ, நஞ்சுதவத்தகு பேயுயிருண்டாய் ஞாதியராதியர்நாசநினைத்து, ளஞ்சுமருச்சுனனுக்கருள்செய்தா யல்லிக்கேணியமர்ந்தபிரானே.()

எத்தனைதேவ ரிருப்பினுநீயே யீடறுமாழியெடுத்தனையன்றித், தத்தறுமாறுபுரத்தலுமுள்ளாய் சற்றுநினைந்தருடந்தருளாயோ, புத்தமுதும்பர் பெறும்படிசெய்தாய் பூதலமுண்டுபுறத்திலுமிழ்ந்தா, யத்தன்வணங்கவிருப்பமளித்தா யல்லிக்கேணியமர்ந்தபிரானே. (ச)

வேயினுமெல்லியதோளியர்பல்லோர் மிக்குறவின்பம்விளைத்துளநீயோர், சேயினிமித்தமுரைத்த சொலெண்ணிச் சிந்தையுனன்புதிளைத்திடல்பொய்யோ, தாயினுமிக்குயர்பேரருளானே சத்தியமில்ல

வர்தாமறியாதா, யாயிரம்வாயரவிற்றுயில்வானே யல்லிக்கேணியமர்ந்தபிரானே. (ரு)

புல்லறிவிற்பெரியார்பலர்கூடும் பொய்ச்சபையூடு புலர்ந்தவளுய்யச், சொல்லரிதாயகலைத்திரளல்குந் தூயவருட்சுவறிற்றெனலாமோ, வல்லமரங்களிரண்டுமுறித்தாய்வாணன்முதற்பலர்வம்பறவென்று, யல்லலொழிக்கு மலர்க்கணுளானே யல்லிக்கேணி யமர்ந்தபிரானே. (சா)

காசைமலர்த்துணரோ நிகர்சீருங்கைப்படையும் பவளக்கனிவாயும், பூசைவிருப்புறுதாள்களுமென்புன்புந்தியுள் வந்ததுபொய்க்கனவாமோ, வோசைநெடுங்கடலிற்கணைபெய்தா யும்பர்தமக்கொருயிர்த்துணையாளு, யாசையனைத்துமளிக்கவலானே யல்லிக்கேணியமர்ந்தபிரானே. (எ)

பூனையெனக்கபடம் புரிதீயோர் புந்திமருண்டு புலம்புறவென்றிட், டூனைவிரும்புநரின்றெனல் கண்டேயுன்சரணிற்புகுமுத்தமனோ, மானைவதைத்திடவுங்கணை தொட்டாய்வாலிமனத்துறும்வஞ்சமறுத்தா, யானையழைத்தலுமங்கெதிர்நின்ற யல்லிக்கேணியமர்ந்தபிரானே. (அ)

நாணமும் வஞ்சமுமின்றிநின்மைந்த னென்மறைகூறிடு நன்னெறியாறும், பூணவியைந்தவெனெஞ் சமிவண்ணம்புண்படும் வெந்துயர்போகவிரங்காய், தூணநினின்றுகுதித் தொருதொண்டன்றுன் பமொழிந்துசுகம்பெறுமாறங், காணவமார்கனகன்றனையட்டா யல்லிக்கேணியமர்ந்தபிரானே. (கூ)

ஈறுபெறுதுயரக்கரமெட்டா லெண்ணுநலத்தை யிரண்டுபடாமற், றேறுமுணர்ச்சியளித்தபினோர்சொற் செப்பியவுண்மைதிகழ்ந்திடலென்றே, கூறுதமிழ்ச் சடகோபனையன்னார் கொள்கையினின்று குலாவியகுன்றே, யாறுபிறந்தகழற்பெருமானே யல்லிக்கேணியமர்ந்தபிரானே. (ய)

தெய்வமுதற் பொருளாய்மறையாலுஞ் செப்பரிதாகிய சீர்பலகொண்டு,மைவர்களுமொருவன்றனதாளென்றல்லிக்கேணியமர்ந்தபிரானை, மெய்வழிபாடுடையார்பலர்வாழும் வேணுவனத்தில் விளங்கொருதொண்டன், பொய்வளமாற நினைந்துசொல்பாடற்புண்ணியருக்குயர்புத்தமுதாமே. (யக)

முற்றிற்று.